For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

மார்ச் 2021 • இதழ் 10

## சமூக பணியில் கிறிஸ்துவின் ஒளி



இந்திய சமூகச் சீரமைப்பில் கிறிஸ்தவம்

பேசும் படம்

சமகால சமூக சேவகர்



# புத்தக அறிமுகம்



பரிசுத்த வேதாகமம், ஆன்மீகத்திற்கு தேவையானவற்றை மாத்திரமல்ல உலகத்தில் வாழும் எல்லா மனிதர்களுக்கும் தேவையான எல்லா காரியங்களையும் உள்ளடக்கியது. மருத்துவம், அறிவியல், கலை, கலாச்சாரம், பண்பாடு, பழக்கவழக்கங்கள் மற்றும் அநேக வாழ்வளிக்கும் வார்த்தைகள் எல்லாவற்றையும் தன்னகத்தே கொண்டது வேதாகமம். இவற்றில் ஒரு பிரிவான அறிவியல் கண்டுபிடிப்புகளை இந்த உலக மனிதர்கள் அறிவிப்பதற்கு முன்பு பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வேதாகமத்தில் தேவமனிதர்கள் பரிசுத்த ஆவியின் ஏவுதலால் எழுதி வைத்துள்ளனர். வேதாகமத்தில் கூறப்பட்டுள்ள சம்பவங்களில் காணப்படும் அறிவியல் உண்மைகள் சிலவற்றின் தொகுப்பே 'வேதாகமத்தில் அறிவியல்' என்ற புத்தகம் ஆகும். 132 பக்கங்களைக் கொண்ட இப்புத்தகத்தில் கர்த்தரின் படைப்பு முதல் இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகை வரைக்கும் உள்ள சில சம்பவங்களில் காணப்படும் அறிவியல் உண்மைகள், இன்றைய அறிவியல் கண்டுபிடிப்பாளர்களால் ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. முதலில் இவர்கள் வேதத்தில் உள்ள அறிவியலை மறுத்தாலும் கடைசியில் அறிஞர்கள் வெளியிடும் கண்டுபிடிப்புகள் வேதம் கூறும் அறிவியல் தத்துவங்களின் அடிப்படையிலேயே வந்து முடிவடைகின்றன. மனிதனின் படைப்பு, மனித உடல் அமைப்பு, மனிதனின் உணவு முறைகள், மனிதனின் ஆயுள் காலம், நோவாவின் பேழை, யாக்கோபின் ஆடுகள், டைனோசர், மற்றும் பல காரியங்களில் வேதம் கூறும் அறிவியல் உண்மைகள் இப்புத்தகத்தில் தொகுத்து வழங்கப்பட்டுள்ளது.

இந்நூலின் ஆசிரியர் பல நூல்களின் ஆதாரங்களோடு கூட தன்னுடைய வாதங்களைத் தொகுத்துள்ளார். வேதாகமத்தில் காணப்படும் அறிவியல் உண்மைகளை வெளிச்சத்திற்கு கொண்டு வரும்படியாக தெரிந்து கொள்ளப்பட்டிருக்கும் தலைப்புகள், வாசிப்போரின் ஆர்வத்தைத் தூண்டுகிறதாக அமைந்துள்ளது. பதில் எட்டாத அநேக கேள்விகளுக்கும், சந்தேகங்களுக்கும் இப்புத்தகம் நல்ல விளக்கத்தைக் கொடுக்கின்ற ஒன்றாக அமைந்துள்ளது. எளிய நடையில், வாசிப்போர் எளிதாக புரிந்து கொள்ளும்படியாக இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது.

இதன் ஆசிரியராகிய அருள்திரு. H. ஜாண் சாமுவேல் அவர்கள் தூத்துக்குடி மாவட்டம் நாசரேத் ஊரைச் சேர்ந்தவர். பள்ளி படிப்பை நாசரேத் மர்காஷியஸ் மேல்நிலைப்பள்ளியிலும், கல்லூரி படிப்பை நாசரேத் மர்காஷியஸ் கல்லூரியிலும், முதுகலை படிப்பை பாளையங்கோட்டை தூய யோவான் கல்லூரியிலும் பயின்றுள்ளார். தன்னுடைய இளங்கலை இறையியல் பட்டத்தை பெங்களூரு ஐக்கிய இறையியல் கல்லூரியில் பெற்றவர். தூத்துக்குடி-நாசரேத் திருமண்டலத்தில் குரு அருட்பொழிவு பெற்று, அதே திருமண்டலத்தில் குருவானவராக கிறிஸ்துவின் ஊழியத்தை நிறைவேற்றி வருகிறார்




**புத்தகம் கிடைக்கும் இடம்**


அருள்திரு. H. ஜாண் சாமுவேல்
சேகர தலைவர்
பண்டாரஞ்செட்டிவிளை சேகரம்
9488400874

## ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பார்ந்த கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் பத்திரிக்கையின் வாசகர்கள், எழுத்தாளர்கள் மற்றும் விளம்பரதாரர்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்கள்.

'நீங்கள் உங்கள் சரீரங்களைப் பரிசுத்தமும் தேவனுக்குப் பிரியமுமான ஜீவபலியாக ஒப்புக்கொடுக்க வேண்டுமென்று, தேவனுடைய இரக்கங்களை முன்னிட்டு உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்; இதுவே நீங்கள் செய்யத்தக்க புத்தியுள்ள ஆராதனை. நீங்கள் இந்தப் பிரபஞ்சத்திற்கு ஒத்த வேஷந்தரியாமல், தேவனுடைய நன்மையும் பிரியமும் பரிபூரணமுமான சித்தம் இன்னதென்று பகுத்தறியத்தக்கதாக, உங்கள் மனம் புதிதாகிறதினாலே மறுரூபமாகுங்கள்' (ரோமர் 12:1-2) என்ற பவுலின் சிந்தை இந்த தபசு காலத்தின் நமது அன்றாட அனுபவமாயிருக்கட்டும்.

இந்த மாத இதழில் சமூகப்பணியாளர்களின் வாழ்வும் சமூகப்பணிப் பற்றிய வரலாறும் என்ற தலைப்பில் வெளிவந்துள்ள கட்டுரைகளை படித்து, சமூகத்தில் நற்செய்திக்கு நற்கிரியைகள் மூலம் சாட்சிகளாயிருப்பதை நம் வாழ்வில் வெளிப்படுத்துவோம். ஏப்ரல் மாத இதழின் கருப்பொருளாக 'திருச்சபை வரலாற்றில் உபதேசியார்களின் பங்களிப்பு' என்று தெரிவு செய்யப்பட்டிருக்கிறது. மிஷனெரிகளுடன் இணைந்து அயராது உழைத்து திருச்சபை உருவாக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் அரும்பாடுபட்ட உள்ளூர் உபதேசியார்களின் வரலாறு பற்றிய கட்டுரையை மார்ச் மாதம் 20 ம் தேதிக்குள் அனுப்புமாறு அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்' பத்திரிக்கையை உங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அறிமுகப்படுத்தி இவ்வூழியத்தை தாங்கும்படியாக அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

தேவகிருபை நம் அனைவரோடும் இருப்பதாக !

கிறிஸ்துவுக்குள்

*மன்னா செல்வகுமார்*


கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**
**வடிவமைப்பு : சுஜித்**.S





**அலுவலக முகவரி**

கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: +91 9176780001
+91 7538812218
04633 290401



# பேசும் படம்

# ஒரு பாத காணிக்கை

பிலிப் கே மல்லி
மேனாள் ஆயர்,
CSI கோத்தகிரி, நீலகிரி.

அடித்தள மக்களைப் பற்றி இன்றைய அரசியல்வாதிகளும் இடதுசாரி சிந்தனையாளர்களும் நிறைய பேசி வருவதை நாம் அறிவோம், ஆனால், ஒரு புதிய சமுதாயத்திற்குரிய முன்னேற்றத்தை அவை நிகழ்த்தியுள்ளனவா என்பது ஒரு பெரிய வினா, இவ்வரலாற்றுப் பின்னணியில், கிறிஸ்தவ நற்செய்திப் பணிகள் கடந்த நூற்றாண்டுகளில் சாதித்தவைகள் பூமிக்கு உப்பாக செயலாற்றி வந்துள்ளன.

மேற்கண்ட ஒளிப்படம் 19-ஆம் நூற்றாண்டு எடுக்கப்பட்டது. நீலகிரி மாவட்டத்தில் வசிக்கும் ஒரு மக்கள் தொகுதியினர் இவர்கள். 1846 - ஆம் ஆண்டு பாஸல் ஜெர்மன் மிஷன் சங்கத்தார் இவர்களிடையே ஊழியத்தை துவக்கினர், ஏறத்தாழ இரண்டு லட்சம் மக்கள் தொகையினரான இவர்களில், கிறிஸ்துவர்களின் தொகை, மூன்றாயிரத்திற்கும் குறைவேயாகும். ஆனால், இந்த சிறிய சமுதாயம், தென்னிந்திய திருச்சபைக்கு மூன்று பேராயர்களை அளித்துள்ளது என்பது மிகவும் வியப்புக்குரிய உண்மையாகும்; அவர்களில் ஒருவர். பிரதமப் பேராயராகவும் சிறந்து விளங்கினார். பாஸல் ஜெர்மன் மிஷனரிகள் கட்டி எழுப்பிய இந்த ஊழியம், கிறிஸ்துவர்களுக்கு என்று மட்டுமல்லாது, ஒரு சமுதாயத்துக்கே புத்தெழுச்சியை அளித்த வரலாறு மகத்தானது, இந்த சமுதாயத்தில் அத்தனை பேரும் கிறிஸ்துவர்களாக மாறவில்லை. ஆனால், 19-ஆம் நூற்றாண்டில் மிஷனரிகள் இவர்களிடையே ஊன்றிய கல்விப் பணிகள், ஒரு வகையில் பார்க்கப் போனால், இவர்களுடைய முழு வாழ்வாதாரங்களையும் முற்றிலும் புரட்டிப் போட்டுவிட்டது என்பது மிகையல்ல, இந்த சமுதாயம் இன்று அடைந்துள்ள ஒரு உயரிய நிலையை ஆவணப்படுத்துவது இவ்வெழுத்தாக்கத்தின் நோக்கமல்ல. ஆனால், 'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்' என்ற முதுமொழிக்கு, இம்மக்களிடையே பாஸல் ஜெர்மன் மிஷன் ஊழியம் ஒரு புதிய இலக்கணத்தையே உருவாக்கித் தந்தது.

கி.பி. 19-ஆம் நூற்றாண்டு நீலகிரி மலை மண்டிலத்தில் பாஸல் ஜெர்மன் சங்கத்தார் இருபதுக்கும் குறையாத மையங்களில் கல்வி பணியை ஊன்றினர், கேத்தி, கோத்தகிரி ஆகிய சிற்றூர்களை சூழ சுமார் இருபத்தைந்து கிலோ மீட்டர் சுற்றளவில் இந்த பள்ளிகள் அமைந்திந்தன. எழுத்துரு இல்லாத மொழியைப் பேசிவந்த இந்த மக்களுக்கு கன்னடம், தமிழ், ஆகிய மொழிகள் வாயிலாக கல்வியறிவு புகட்டப்பட்டது அந்த கால கட்டங்களில் ஐரோப்பாவின் பல பகுதிகள், ஆஸ்திரேலியா மற்றும் அமெரிக்க குடியேற்றப் பகுதிகளிலும் கூட இவ்வாறான குறைந்த சுற்றுவட்டப் பகுதிகளில் அத்தனைப் பள்ளிகள் இயங்கியதில்லை என ஆவணப் படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறாக, தண்ணீர்களின் மேல் ஆகாரத்தைப் போட்ட மிஷனரிகள் கொஞ்சத்தில் உண்மையாயிருந்து ஆற்றிய பணிகள், ஒரு முழு சமுதாயத்தையே எப்படி கட்டி எழுப்பிற்று என்பது ஒரு பிரம்மாண்டமான வரலாற்று நிகழ்வு 1846 - ஆம் ஆண்டு விதைக்கப்பட்ட இந்த ஒரு சமூகப்பணி, 1914-18 வரையிலும், எழுபது ஆண்டுகள் போல தொய்வில்லாமல்

சென்றது. ஆனால், முதலாம் உலகப்போரின் போது, அரசியல் காரணங்களுக்காக, ஆங்கிலேயர் இந்த ஜெர்மன் மிஷனரிகளை நாடு கடத்தி விட்டனர். ஆனால், இம்மக்களுக்காக தீர்க்கதரிசனத்தோடு ஊன்றப் பட்ட இக்கல்விப் பணிகள், ஒரு புதிய சமூகத்தையே இம்மக்களிடையே உருவாக்கிற்று (நீதிமொழிகள் 29:18) பாஸல் ஜெர்மன் மிஷனரி சங்கத்தாரின் தரிசனத்துக்கு, இந்த எழுத்தாக்கத்தை பாத காணிக்கையாக்குகிறேன்.

'சமாதானத்தைக் கூறி, நற்காரியங்களைச் சுவிசேஷமாய் அறிவித்து, இரட்சிப்பைப் பிரசித்திப்படுத்தி.... சொல்லுகிற சுவிசேஷகனுடைய பாதங்கள் மலைகளின் மேல் எவ்வளவு அழகாயிருக்கின்றன' (ஏசாயா 52:7).

# ரோசப்பூ என்ற ஜயார்ஜ் ஜோசப்

பாஸ்டர் .C. டேவிஸ்
சிவகாசி

வரலாறு என்றாலே அதில் குருதி ஆறு ஓடாமலா இருக்கும்?.ஆங்கிலேய கிழக்கிந்திய கம்பெனியினாலே தான் மிஷினெரிகள் பலரும் இந்தியாவுக்கு வந்தனர் என இன்றைக்கு பல கிறிஸ்தவ எதிர்ப்பு இயக்கத்தார்கள் நினைக்கின்றனர். ஆனால் வரலாற்றின் உண்மை அதுவன்று. கிழக்கிந்திய கம்பெனிக்காரர்களால் தான் இந்தியாவுக்கு மிஷினெரிகள் வரவு கடுமையாக எதிர்க்கப்பட்டது. காரணம் மிஷினெரிகள் இந்திய மக்களின் பண்பாட்டை சிதைத்து, நமக்கு வருவாய் இழப்பு ஏற்படுத்தி விடுவார்களோ என்ற அச்சம் தான்.

ஆங்கிலேய ஆட்சிக்காலத்தில் பல அடக்குமுறைகள் இருந்தாலும், பல ஆட்சியர்கள் தங்களுக்குக் கீழ் இருந்த மக்களுக்கு சம உரிமையையும் வழங்கினர் என்பதில் ஐயமேதுமில்லை ஒரு நாணயத்தின் இருபக்கம் போல இப்படிப்பட்ட சூழலில் தான் ஆங்கிலேய அரசு கொண்டு வந்த முக்கியமான சட்டம் ரேகை சட்டம். இந்த சட்டத்தை குறிப்பிட்ட மக்கள் மீது ஆங்கிலேய அரசு திணிக்க முயன்று அது பெரிய பெருங்காமநல்லூர் துப்பாக்கிச் சூட்டில் போய் நின்றது. இந்த இடத்தில் துப்பாக்கிச் சூடு என்றதும் மண்டைக்காடும் நினைவில் வந்தாடுகிறது. இதையெல்லாம் கிறிஸ்தவர்கள் எளிதாக மறந்துவிடுவதால் மீண்டும் நாம் நினைவூட்ட விரும்புகிறோம்.



இந்த ரேகை சட்டம் குற்றப்பரம்பரை என்று முத்திரைக் குத்தப்பட்ட இனத்தின் மேல் பாய்ச்சப்பட்டது. இந்த சட்டத்தை எதிர்த்து போராடியவர் தாம் ஜார்ஜ் ஜோசப் என்கிற கிறிஸ்தவர், மற்றும் பலமுறை காந்தியோடு முரண்பட்ட காந்தியவாதி. இவரை மதுரை மக்கள் அன்புடன் ரோசப்பூ துரை என்று அன்புடன் அழைக்கப்படுகிறார். இவருடைய சிலை மதுரையில் சிம்மக்கல் தாண்டிய உடன் மேம்பாலத்திற்கு முன்னர் அமைக்கப்பட்டுள்ளது.

இந்த ஜார்ஜ் ஜோசப் குறித்து சிறிய விபரத்தை நாம் இங்கு காண்போம்.

ஜார்ஜ் ஜோசப் கேரளத்திலுள்ள செங்கான்னூரில் 1887-ஆம் ஆண்டு சிரியன் கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்தார். 1903-ஆம் ஆண்டு தம் பள்ளிப்படிப்பை முடித்துக் கொண்டு சென்னை கிறிஸ்தவ கல்லூரியில் எப்.ஏ. படிக்க வந்தார். எப்.ஏ. என்பது கல்லூரிப் படிப்புக்கு முன்னுள்ள படிப்பு (இண்டர் மீடியட்), 1904-ஆம் ஆண்டு ஜார்ஜ் ஜோசப், மேல்படிப்புக்காக பிரிட்டனுக்குச் சென்றார். எடின்பரோவில் எம்.ஏ. லண்டனில் பாரிஸ்டர் படிப்பையும் முடித்தார். 1909-ஆம் ஆண்டு லண்டனிலிருந்து திரும்பிய ஜார்ஜ் ஜோசப்புக்கு பலத்த வரவேற்பு கொடுக்கப்பட்டது. பின்னர் திருவிதாங்கூர் அரசவையில் மதிப்பு மிக்க வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒருவரின் மகள் சூசன்னா. இந்த சூசன்னாவை தம் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொண்டார் ஜார்ஜ் ஜோசப். இத்தம்பதியினருக்கு மூன்று குழந்தைகள் மகன் மான்சி, மகள்கள் மோலி, மாயா. 1871-ஆம் ஆண்டு கிரிமினல் ட்ரைப்ஸ் ஆக்ட் அதாவது குற்றப்பரம்பரைச் சட்டம் என்பதை பிரிட்டிஷார் தங்களின் ஆட்சி அமைந்த வடபகுதியில் அறிமுகப்படுத்தினர். சந்தேகிக்கப்படும் நபர்கள் பெரும்பாலும் ஒரே சமூகத்தினராக இருந்ததால் அந்த சமுகத்தையே குற்றப்பரம்பரையாகக் காட்டிவிடுவது அரசாங்க நடைமுறையாக இருந்தது. இந்த குற்றப்பரம்பரைச் சட்டம் சட்டமாக வடிவம் பெறுவதற்கு வடஇந்தியாவில் கள்ள நாணயங்களை அச்சடிப்பர்களைக் கட்டுப்படுத்தவே கொண்டுவரப்பட்டது. பிற்பாடு இந்த சட்டம் இந்தியா முழுமைக்கும் கொண்டு வரப்பட்டது. இந்த சட்டத்தின் கீழ் ஒருவர் தம் பெயரை காவல்துறையிடம் பதிவு செய்து கொள்வதோடு, தம் கை ரேகையையும் பதிவு செய்ய வேண்டும். இதை ரேகைச்சட்டம் என்றும் சொல்வர். இப்படி பதியப்பட்டவர்களின் பெயர்கள் மாவட்ட நீதிபதியின் பார்வையில் மாவட்ட கண்காணிப்பில் கீழ் இருக்கும். இந்த சட்டத்தின் கீழ் பெயர் பதிவு பெற்றவர்கள் காவல் துறையின் அனுமதியின்றி வெளியே செல்லக் கூடாது. மேலும் பல கட்டுப்பாடுகள் இந்தச் சட்டத்தில் உண்டு.

இப்படிப்பட்ட சூழலில் இந்த சட்டத்தினால் அதிகம் பாதிக்கப்பட்டவர்கள் கள்ளர் மறவர் உள்ளிட்ட குற்றப்பரம்பரையாக சுட்டிக்காட்டப்பட்டனர். அந்த சமூகத்தை அந்த

கொடுமையிலிருந்து காப்பாற்ற கடுமையாக போராடிய முதல் நபர் ஜார்ஜ் ஜோசப் ஆவார். இந்த சட்டத்தை எதிர்த்து பிறமலைக் கள்ளர்கள் அனைவரும் ஆங்கிலேய அரசுக்கு எதிராக திரண்டனர். அதில் ஏற்பட்ட துப்பாக்கி சூட்டிற்கு பிறகு இந்த சட்டம் தளர்வு கண்டது.

இந்த சட்டத்தை நீக்க அரும்பாடுபட்ட ஜார்ஜ் ஜோசப் அவர்கள் காந்தியுடனும், மற்றும் பிற காங்கிரஸ் தலைவர்களுடனும் மிக நெருக்கமாக இருந்தவர். அவருடன் நெருக்கமாக இருந்த ராஜாஜி, மற்றும் பல தலைவர்களின் வரலாற்றை எழுதியவர்கள் வசதியாக ஜார்ஜ் ஜோசப்பை கிறிஸ்தவர் என்ற கண்ணோட்டத்திலேயே அவரின்



வரலாற்றை இருட்டறைக்குள் போட்டுவிட்டனர். காந்தி செய்தது எல்லாவற்றிற்கும் ஜார்ஜ் ஜோசப் உடன்படவில்லை. காந்தியின் பல கருத்துகளுக்கும் எதிர்வினையாற்றியுள்ளார். கதர் ஆடைக்கான உற்பத்திச் செலவு அதிகமாக இருப்பதால் காக்கி உடைகளை தயாரிக்கலாம் என்ற ஜார்ஜ் ஜோசப்பின் ஆலோசனையை காந்தி ஏற்றுக் கொள்ளவில்லை. காந்தியின் செயல்களுக்கெல்லாம் எதிர்வினை ஆற்றிய ஜார்ஜ் ஜோசப்புக்கு காந்தி எழுதிய ஒருவரிக் கடிதம்

Oh! George Jospeh, Why have you Forsaken me?

இப்பொழுது நாம் சொல்ல வேண்டிய வரலாற்று செய்தி

**Oh, India Why have you Forgets George Joseph?**

# சுவாட்ஸ் ஐயரின் சமூக தொண்டு

அருள்திரு T. இர்வின் ஞானமுத்து,
திருச்சி தஞ்சை பேராயம்

சுவாட்ஸ் ஐயர் தமது ஊழிய ஆரம்பத்திலிருந்தே பள்ளிக்கூடச் சேவையில் பெருஞ்சிரத்தையெடுத்து ஊக்கமுடன் உழைத்தார், சுவிசேஷப் பிரபல்ய சேவையில் பாடசாலை ஸ்தாபனம் ஒரு முக்கிய அம்சம் என நம்பினார். அவ்வனுபவம் தற்காலத்தில் தஞ்சை, திருச்சி, ராமநாதபுரம் போன்ற ஸ்தலங்களில் உயர்தரப் பாடசாலைகளுக்குப் பலமான அஸ்திபாரமாயிற்று.

கால்நடையாய் தஞ்சை திருச்சி பட்டணங்களுக்கும் போய் அங்குள்ள கிறிஸ்தவருக்கும் புறமதஸ்தருக்கும் பிரசங்கித்தார். திருச்சியில் ஆங்கிலேயரால் ஆதரிக்கப்பட்டு ஆலயமும் பாடசாலையும் அவ்வாதரிப்பின் அத்தாட்சியாய் அமைந்தன.

திருச்சியில் வெடிமருந்து மண்டபம் தீயினால் நஷ்டமுற்று நிர்மூலமாகவே, அங்குள்ள பலர் உயிர்ச்சேதமுற்றனர். அவ்விபத்தினால் அநாதையான பிள்ளைகளுக்கெனப் பணம் பிரித்து ஓர் ஆங்கில அநாதைப் பள்ளிக்கூடமொன்றைச் சுவாட்ஸ் ஐயர் ஸ்தாபித்தார். அப்பள்ளியே தற்போது திருச்சி செயின்ட ஜான்ஸ் வெஸ்ட்ரி ஸ்கூல் (St. John's Vestry School) எனும் பேர் வாய்ந்து வருகின்றது. சுதேசிகளுடன் சுவாட்ஸ் ஐயருக்கிருந்த சகவாசத்தினால் ஆங்கிலப் பட்டாளத்திற்குப் பல்வகையிலும் அவர் பேருதவியாயிருந்தார்.

சுவாட்ஸ் ஐயர் பட்டாளத்திற்கு செய்த வேலைக்காக நவாபு, இனாமாக கொடுத்த 600 வராகனை அவர் எடுத்துக்கொள்ளாமல் திருச்சி மிசியோனுக்கும் யுத்தத்தில் இறந்துபோன போர் சேவகரின் பிள்ளைகளுக்காக ஸ்தாபித்த ஆதரிப்புப் பாடசாலைக்கும் உபயோகப்படுத்தினர். சில காலத்திற்குப்பின் நவாபு அப்பாடசாலைக்காக 300 வராகன் கொடுத்தார். அதே வருஷத்தில் சென்னை கவர்னர், திருச்சியிலிருந்த பட்டாளத்தில் சுவாட்ஸ் ஐயர் நடத்தி வந்த தெய்வ ஊழியத்திற்காக வருஷவாரி ஆயிரம் ரூபாய் கொடுத்துவர உத்தரவளித்தார். ஐயரோ இதில் பாதியைத் தமக்காகவும் பாதியைச் சபைகளுக்காகவும் உபயோகித்து வந்தார். அவர் தாமெடுத்துக்கொண்ட தொகையில் தமக்கு ஒரு சிறு வீட்டையும், இங்கிலீஷ் தமிழ்ப் பாடசாலைக்காக ஒரு கட்டடத்தையும் கட்டினர்.

ஹைதர் அலி இங்கிலீஷ்காரரோடு 1769-ஆம் வருஷத்தில் மூன்று மாத காலம் திருச்சிராப்பள்ளிக்கு அருகில் போர் புரிந்தான். அப்போரில் காயப்பட்ட இங்கிலீஷ் போர்ச் சேவகருக்குச் சுவாட்ஸ் ஐயர் சுவிசேஷத்தைக் கொண்டு ஆறுதல் சொல்லிவந்தார். 1772-ஆம் வருஷத்தில் திருச்சிராப்பள்ளியில் மருந்துக் கிடங்கு பற்றிக்கொண்டதால் ஐரோப்பியரும் சுதேசிகளுமான அநேகர் உயிர்ச்சேதமடைந்தார்கள், அநேகர் காயப்பட்டார்கள். வெடிமருந்துடன் துப்பாக்கித் தோட்டாக்களும் குண்டுகளும் ஆகாசத்திலெழும்பி, ஆலங்கட்டிபோல் விழுந்தன. ஐயர் வீட்டின் ஜன்னல்களும் உடைபட்டு அநேக குண்டுகள் ஐயரின் அறையில் அவரருகே விழுந்தும், கர்த்தருடைய கிருபையால் அவர் சேதமின்றிக் காக்கப்பட்டார்.

அரசு தூதுவராக சென்ற போது ஹைதர் அவரோடு பட்சமாய்ச் சம்பாஷித்து. கடைசியாகத் தன்னோடு பெர்சிய பாஷையில் பேசக் கேட்டுக் கொண்டான். ஐயர் அவனிஷ்டப்படி செய்து நான் தங்களிடம் தூது வந்ததால் இந்தத் தேசத்திற்கும், அதன் குடிகளுக்கும் சேமம் உண்டாவதாக என்று சொன்னார். ஹைதர் அவரை இதற்காகப் புகழ்ந்து, அவருக்குப் பிரயாணச் செலவுங் கொடுத்தனுப்பினான். இத்தொகையைக் கொண்டு ஐயர் பிற்காலத்தில் தஞ்சாவூரிலே தர்மப் பள்ளிக்கூடமொன்றைக் கட்டினர். அப்படியே இங்கிலீஷ் கம்பெனியார் கொடுத்ததையும் தாம் வாங்கிக்கொள்ளாமல், அதைத் திருச்சிராப்பள்ளியிலிருந்த, போலே ஐயருக்குக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார். அவர் விருப்பத்திற்கிசைந்து, போலே ஐயருக்கு வருஷாந்தரம் 300

வராகன் கொடுத்துவந்தார்கள். மேலும், தஞ்சாவூரிலிருந்த இங்கிலீஷ் பட்டாளத்தாருக்குக் குருவாயிருந்ததற்காக தமக்குக் கிடைத்த பதினாயிரம் ரூபாயையும் சுவார்ச்சையர் தமக்கென்று எடுத்துக்கொள்ளாமல், அதில் பாதியைத் தமது சிஷனாகிய யோவான் கஸ்பார் கோலோப்புக்குக் கொடுத்துவிட்டு, மறுபாதியை ஐந்து உபதேசிமாரின் சம்பளத்துக்காக வைத்து வைத்தார்.

சுவாட்ஸ் ஐயர் எதிர்பார்த்திருந்தது போல் ஹைதர் ஆலி வெகு 'ஆக்ரோஷத்துடன் படையெடுத்து ஆங்கிலயரை' அடியோடே விரட்டிவிடும்படியான எத்தனத்தோடே தாக்கினான். அச்சமயத்தில் இங்கிலாந்துக்கும் பிரான்சு தேசத்திற்கும் சண்டை நேரிட்டதால் இந்தியாவிலும் பிரஞ்சுக்காரர் ஹைதர்அலியுடன் சேர்ந்து கொண்டார்கள். பல தேசம் ஹைதரின் கைவசமாகி வந்தது. பலத்த யுத்தம்; ஏராளமான மக்கள் மடிந்தார்கள். தென்னிந்தியா முழுதும் நீர்த்தூளியானது. ஆங்கிலேயரும் இந்துக்களும் நிர்மூலமாக்கப்பட்டு அவர்களுடைய சிறு பிள்ளைகள் பிடிப்பட்டு சிறை பிடிக்கப்பட்டார்கள். வீடுவாசல் யாவும் அக்கினிக்கிரையாகின. விக்கிரகங்கள் கொள்ளையாடப்பட்டன. பேர் கிறிஸ்தவர்கள் படாதபாடுபட்டனர். தேசம் வெறுமையாகி வாழும் நாட்டில் பஞ்சம் புகுந்து குடிமக்களை அலங்கோலமாக்கிற்று. சுவார்ச்சையர் அச்சந்தர்ப்பத்தில் சமய சகாயரெனத் விளங்கினார். முன் ஜாக்கிரதையுடன் அரிசியைச் சேகரித்து வைத்திருந்தார். பசிப் பிணியால் வருந்தியவர்களுக்குப் பாதுகாப்பும் போஜனமும் பரிமாறி பிரஜைகளின் தவிப்பைத் தணித்தார்.

அரசனுக்கும் ஐரோப்பியருக்கும் இருந்த மதிப்பெல்லாம் மாறி மறைந்துபோயின. அவர்களை அண்டுவோர் எவருமின்றி உதவியற்றவராயினர். ஐரோப்பியர் அருந்த ஆகாரமின்றி அவதிக்குள்ளானபோது, சுவார்ச்சையரை கொண்டே மக்களிடமிருந்து சாப்பாட்டுக்கானதைச் சவதரிக்கலாயிற்று. அச்சமயம் சுவார்ச்சையர் பேரில் அனைவரும் அளவு கடந்த அபிமானங்கொண்டு, அவரது ஆசிக்கு அட்டின்றி. அடங்கினர். ஐயரே முன்னின்று தானியத்தைக் கொள்ளுவதும் கிரயத்தைக் கணக்குடன் கொடுத்துத் தீர்ப்பதுமாயிருந்தார். நெற்களஞ்சியங்கள் நெருப்பினால் நாசமடைந்தவிடவே, கோட்டைக் கோயிலை களஞ்சியமாக்கிக் கொண்டு நெல்களைக் காப்பாற்றினர். 'அடைக்கலமாக ஓடிவந்த அகதிகள் அனைவரையும் அரவணைத்து, ஒன்றரை வருஷகாலமாய் அவர்களுக்கு அன்னம் வடித்து ஆதரித்த பரோபகாரியாய் விளங்கினர்.

1782-ஆம் வருஷத்தில் ஹைதர் இறந்த பின்னும் திப்புசுல்தான் 1783-ஆம் வருஷ முடிவு மட்டும் யுத்தத்தைத் தொடர்ந்து செய்தான். அவன் அநேகரைப் பிடித்து, விக்கிரகங்களை நிர்மூலமாக்கி, வீடுகளைக் கொளுத்தி, இந்துக்களிலே ஆண் பிள்ளைகளைச் சிறைபிடித்து அநேகருக்குச் சுன்னத்துப் பண்ணுவித்தான். மூன்று வருஷகாலமாக சண்டையும் பஞ்சமும் பெருத்தபடியால், சுவார்ச்சையர் எற்கனவே யோசனை செய்து, வேண்டிய தானியத்தை முன்னடியே சேகரம்பண்ணி, கிறிஸ்தவர்களும் இந்துக்களுக்குமான அநேக ஏழைகளைப் பராமரித்தார். இராஜாவாவது கம்பெனியாராவது தானியஞ் சம்பாதிக்கக் கூடாதிருந்தபொழுது, அவர்கள் சுவார்ச்சையரைக் கேட்டுக்கொண்டு அவர் மூலமாய்த் தானியத்தைப் பெற்றுக்கொண்டார்கள் குடிகளுக்கு சுவார்ச்சையரிடத்திலிருந்த



விசுவாசம் ராஜாவினிடத்திலாவது கம்பெனியாரிடத்திலாவது இருந்ததில்லை, தெய்வ கிருபையால் யுத்தகாலம் முடிந்து, திப்புவுக்கும் கம்பெனியாருக்கும் சமாதானமாயிற்று.

யுத்தகாலத்தில் சுவார்ச்சையர் உடல்நலம் பாராமல் அரும் பிரயாசத்தொடு உழைத்ததினாலும், பஞ்சகாலத்தில் பல கஷ்டங்களுக்குள்ளாகிப் பெரும் பணியாற்றினதினாலும், அவருக்கு பலவினம் மிகுந்தது. அதுவுமன்றி ஐரோப்பியருடைய அவபக்தியான ஜீவியமும், துர்நடத்தையும், உத்தியோத்தில் உண்மையற்றபோக்கும், உல்லாச வாழ்வும் சுவார்ச்சையருடைய தூய்மையான ஆவியைக் கலங்கவைத்தன. முற்காலத்தில் ஆதியில் அமைச்சர்கள் தங்களுடைய பாவ வழியில் அரசனைச் சிக்கவைத்து அவனுடைய ஆட்சியைப் பாழாக்கினார்கள்.

**சுவாட்ஸ் ஐயரின் அரசியல் அனுபவம்**

தஞ்சாவூரில் துரைக்கு இராஜ சமுகத்தில் சுவார்ச்சையரால் விவாகம் நிறைவேற்றப்பட்டது. அது முதல் ஐயர் இராஜாவைக் கண்டு பேச அதிக சமயம் அவருக்குக் கிடைத்தது. தஞ்சாவூர் ராஜா பகுதி கட்டத் தவறினபடியால் 1773-ஆம் ஆண்டு ஆற்காட்டு நவாபு தஞ்சாவூரைப் பிடித்து, அரண்மனைப் பொக்கிஷங்களை எடுத்துக்கொண்டான். அத்தருணத்தில் தஞ்சாவூரில் கட்டியிருந்த ஜெபவீடும் இடிக்கப்பட்டது. சுவார்ச்சையர் நவாபைக் கொஞ்ச நிலம்கேட்டும் அவன் கொடுக்கவில்லை. சண்டையும் பஞ்சமும் ஏழை ஜனங்களை வருத்தினபடியால், தயாள புருஷனாகிய சுவார்ச்சையாரிடம் அநேகர் வந்து சேர்ந்து ஞானஸ்நானம் பெற்றார்கள். அவர்கள் வயிற்றுப் பசியால் வந்தாலும், சுவார்ச்சையர் முந்தி அவர்களைப் போதித்து, பின்பு சபையில் சேர்த்துக்கொண்டார். சில நாளுக்குப்பின் தஞ்சாவூர் சமஸ்தானம் நவாபின் வசத்தினின்று

விடுதலையாக்கி, துளசிமகாராஜாவுக்குக் கொடுக்கப்பட்டது. இது அவருடைய சாமர்த்தியத்தையும் விவேகத்தையும் புகழ்ந்து கொண்டார்கள்.

ஐரோப்பியரும் சுதேசிகளும் நெருங்கி உறவாடுவதற்கான விதமாய் ஆங்கில அனுபவம் அனுகூலமாகுமென்று சல்லிவன்துரை சொல்ல சுவாட்ஸ் ஐயர் சந்தோஷமாய்ச் சம்மதித்தார். அதற்கென்று தஞ்சையில் போதன பயிற்சி மடம் ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது. ஜெர்மனியிலிருந்து வாலிபரை வரவழைத்து அவர்களை ஆங்கில பாடசாலை ஆசிரியராய் அரங்கேற்றுமாறு அவர்களுக்குப் போதிய பயிற்சி கொடுத்து அவ்வாசிரியரைக் கொண்டு ராமநாதபுரம், சிவகங்கை தஞ்சை முதலான இடங்களில் சமஸ்தான இலாகா-ஆங்கில-வித்யாசாலைகள் ஸ்தாபிக்கப்பட்டு அந்தந்த சமஸ்தான அரசர் சிற்றாசரால் அவ்வித்யாசாலைகளுக்கு மானியங்களும் வழங்கப்பட்டன. அவை அனைத்தும் ஐயரவர்களின் அரும்பிரயாசத்தால் நாளிது பரியந்தம் அருமை பெருமையாய்ப் பாரட்டப்படுகின்றன.

தஞ்சையில் ஸ்தாபகமான அவ்வாங்கில வித்யாசாலையே இந்திய சுதேசிகளுக்கென்று ஆதி ஆங்கில பாடசாலையாய்ப் பெருமை வாய்ந்தது. காலக்கிரமத்தில் அவ்வித்யாசாலை. விருத்தியாகித் தஞ்சை பரி. பேதுரு கல்லூரியாக வளர்ச்சியுற்றது. தற்காலத்தில் பல பள்ளிக்கூடங்கள் கூடிய ஒரு உயர்தரப் பாடசாலையாக ஓங்கியுள்ளது. ராமநாதபுரத்திலும் சுவார்ச்சையர் ஏற்படுத்தின ஆரம்ப ஆங்கில பாடசாலை வரவர வளம்பெற்று வளர்ந்த G. H. லாம் ஐயர் அதன் தலைவராய்த் திகழ்ந்த, காலத்தில் 'சுவார்ச் உயர்தரப் பாடசாலை' யெனும் சுபநாமம் சூடி நலமே நடந்தேறி வந்தது.

தஞ்சை சமஸ்தானத்தில் சில காலமாய்த் தலையெடுத்து வாட்டின நவாபின் அமர்க்களமும் யுத்தத்தின் கோஷ்டமும் அடங்கவே ஒருவித வறுமையும் விடாய்ப்பும் வலித்து நாட்டை வாட்டின. அரசனுக்கு முன்னிருந்த ஆர்பாட்டம் பண ஓட்டம் யாவுமின்றிக் கம்பெனி கொடுக்கவேண்டிய கப்பதிற்கும் வழியில்லாமல் விழிக்க வேண்டியதாயிற்று, அத்துடன் அவருடைய மக்களும் பேரப்பிள்ளைகளும் மரிக்கவே வாரிசு இல்லாமல் அங்கலாய்ப்பில் அரசன் அசடுபோலானான். போதாதகுறைக்கு தீராப்பிணியுமுற்றான், மனமுடைந்தவனாய் அரண்மனையை விட்டு வெளியேறாமல் தன்னந்தனிமையாய் விரதமாய்த் தொடுத்தான் அரசியல் நிர்வாகத்தை அறவே ஒழித்தான்,

அரசருக்கேற்ற ஒரு பிரதானி, அவன் அதுவே சமயம் எனக்கண்டு, மனங்கொண்டபடி வரியை விதித்து, அரசருக்கு ஒருபங்கு, தனக்கு ஒருபங்கென அரசியல் வருமானத்தையெல்லாம் அவலமாக்கினான், குடிகள் வருந்தினர்: கண்ணீர் விட்டனர்; ஆற்றுவாரில்லாமல் தேற்றுவாருமில்லாமல் மனம் பதைத்தனர்; வேதனையடைந்தனர்; ஊரைவிட்டோடினர். சமஸ்தானம் பாலைவனம்போல் வெறுமையாயிற்று. நிலத்தைப் பண்படுத்துவார் ஒருவருமில்லாமல் தேசம் நாசமானது. இதனால் அநேக பிரஜைகள் திருச்சிராப்பள்ளிக்கும் காரைக்கால் முதலிய இடங்களுக்கும் வலசை வாங்கினார்கள்.

எவ்விதமான மாறுதலும் ஏற்படாத பட்சத்தில் வலசைப் போன மக்கள் திரும்பி வர மறத்துவிட்டார்கள், அரசருக்கு அம்மாறுதல் ஒவ்வாதுபோயினும் கதிவேரின்றி, சுவாட்ஸ் ஐயர் அரசரிடம் பேசி, நேர்வழியைக் காண்பித்து, குடிமக்களிடம் கோமானுக்கிருக்க வேண்டிய குணநலகணங்களைக் குறிப்பிட்டுக் கூறி அரசைச் சாந்தப்படுத்தினர். அந்தக் கமிட்டியார் சமஸ்தானத்தை அரசனை விட்டு எடுத்துப் போடுவது உசிதமென்று நினைத்தும், சுவார்ச்சையர் இராஜாவுக்காகப் பரிந்து பேசி, இராஜாவுக்குப் புத்தி சொன்னதினால் சமஸ்தானத்தை ஒழுங்குக்குக் கொண்டு வந்தார். அரசரும் புத்தி தெளிந்து, குடிகளின் குறைகளைப் போக்கி, வரி விதிகளைச் சுலபமாக்குவதாகவும், விளம்பரஞ் செய்வித்தான். அதேசமயத்தில் சுவாட்ஸ் ஐயர் சர்க்காரிடத்திலும் அரசனுக்குச் சார்பாய் சொல்லவேண்டியதை சொல்லி சர்க்கார் இனி அவனது அரசாட்சியில் தலையிடுவது தர்மமாகாது என்றும் தீர்மானமாயெடுத்துரைத்தார். சுவாட்ஸ் ஐயரின் ஆலோசணைக்கேற்க அரசனும் ஓடிப்போன குடிமக்களைத் தேடி அழைத்தான். அரசன் மேலுள்ள நம்பிக்கை தொய்ந்து விட்டதால் குடிகள் திரும்பிவரத் தயங்கினர்கள். அரசனின் அழைப்பைத் தாமும் ஆமோதிப்பதாகச் சுவாட்ஸ் ஐயர் உறுதிவாக்கு உரைத்ததும் குடிஜனம் சந்தேகம் நீங்கிச் சந்தோஷமாய்த் திரும்பி வந்து, தத்தம் தொழில்களைத் தொடங்கி முன்னிலும் மேம்பட்ட மகசூல் செய்ய முயற்சித்தனர். சென்னை கவர்னர் அவ்விஷயத்தில் சுவார்ச் ஐயரின் பொதுஜன சேவையை வெகுவாய் மெச்சி சர்க்கார் சம்பளமாக வருஷத்திற்கு நூறு பவுனும், பல்லக்குச் செலவுக்காக மாதத்திற்கு இருபது வராகனும் சுவாட்ஸ் ஐயருக்குச் செலுத்தும்படி கட்டளை பிறப்பித்து ஐயர்வர்களைக் கனப்படுத்தினான்.

அரசன் சுகவீனம் முற்றியதால் தனக்குப்பின் தன் பிள்ளை சர்போஜியை பராமரிக்கும் பொறுப்பை ஐயரே எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதாய் அரசன் அவரை வெகுவாய் வற்புறுத்தினான். ஆனால் அதற்கு ஐயர் சம்மதியாமல் அரண்மனையிலுள்ளவர்களில் ஒருவரே அவ்வித உத்தரவாதத்தை ஒப்புக்கொள்ளுதல் முறையாம் என்பதைத் தெளிவாய் உரைத்து அரசனுடைய சகோதரன் அமீர்சிங்கையே சிறுவனைப் பாதுகாக்கும்படியாகச் செய்வித்தல் சர்போஜிக்கு மாத்திரமல்ல, சமஸ்தானத்துக்குமே நன்மையாகும் என்பதை அரசனுக்குச் சுவாட்ஸ் ஐயர் எடுத்தச் சொன்னார். என்ற போதிலும் சர்போஜியின் சன்மார்க்க வளர்ப்பையும் கல்விப் பயிற்சியையும் ஐயரே கவனித்துக்கொள்வதாயும் அரசனுக்குத் தம் அனுதாபத்தைப் பாராட்டியும் உறுதி வாக்கிட்டார். அரசனும் ஐயரின் ஆலோசனைக்கேற்ப ஒழுங்கு செய்தான். அந்த நேரத்தில் துல்ஜாஜி மகாராஜா மரணமடைந்தார். சுவாட்ஸ் ஐயருடைய சகவாசத்தினால் அரசனுடைய தேவிமார் எவரும் உடன்கட்டை ஏறவில்லை, சர்போஜி மைனராயிருந்ததினால் அவன் வாரிசில் அமீர்சிங் ராஜ்யபாரப் பொறுப்பை வகிக்கவேண்டியதாயிற்று. அச்சமயம் சமஸ்தானமெங்கும் சுவாட்ஸ் ஐயரின் செயல் சிறப்புற்றது. அமீர்சிங்கும். நேர்மையுடன் நீதி செலுத்தி, குடிமக்களின் குறைகளைத் தீர்ந்து, அவர்களை அரவணைப்பதான தீர்மானத்துடன் அரசியல் ஆற்றலில் திறமைத் தீட்டினான், துல்ஜாஜி மகாராஜாவின் கணக்குகளை முடிவு கட்டினதில் ஐந்து வருஷங்களுக்கு முன் அரசனுக்குச் சுவாட்ஸ் ஐயர் கொடுத்திருந்த ஆயிரம் வராகன்களைத் திருப்ப அவருக்குக் கொடுத்துத் தீர்த்ததோடே துல்ஜாஜி சுவாட்ஸ்சையருக்கு வாக்கிட்டபடி அனாதை பிள்ளைகளின் பள்ளிக்கூடத்திற்கென்று வருஷத்திற்கு ஐந்நூறு வராகன் வருமானம் தரத்தக்க கிராமமொன்றை கொடுத்தார்.

# சமூக பணியில் கிறித்தவர்களின் பங்களிப்பு

டேனியல் மோகன்ராஜ், சென்னை

இங்கிலாந்து பாராளுமன்றத்தில் 'கிழக்கிந்தியக் கம்பெனி சட்டம் 1813' அல்லது 'பட்டய சட்டம் 1813' இயற்றப்பட்ட பிறகு இந்தியாவில் கிறித்தவ சமயம் பரப்ப வெளிநாட்டு கிறிஸ்தவ இயக்கங்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டது. அதன் அனுமதியோடு வந்த மிஷனரிமார்களுள் மெத்தடிஸ்ட் வெஸ்லியன் மிஷனரி சங்கமும் ஒன்று. இந்தியாவில் கால்பதித்த நாட்களில் துவங்கி நம் நாடு பல்வேறு மொழி, கலாச்சாரம் மற்றும் சாதி பிரிவினைகளால் வேறுபட்டதை கண்டு சற்று கலக்கமுற்றனர். இருப்பினும் மொழி மற்றும் கலாச்சாரத்தை பல பாடுபட்டு நம்மை போலவே உணவு உண்பது, உடை உடுத்துவது, நமது மொழிகளை கற்பிப்பது போன்றவைகளால் இந்தியாவில் இறை பணிகளை சிறப்பாக மேற்கொள்ள உதவியாக இருக்கும் என கருதினர்.

ஆனால் அவர்கள் மேற்கொண்ட இறைபணிகள் விரிவடையாமல் ஒரு சிலருக்கு மாத்திரமே பயனுள்ளதாய் இருந்தது மேலும் அவர்கள் துவங்கிய பள்ளிகளில் பெரும்பாலும் உயர்குலத்தை சார்ந்தவர்களே பயின்று வந்தனர். இதனால் கிறித்தவ பணிகளும் அவர்கள் நினைத்தவாறு விரிவடையவில்லை. பல ஆண்டுகளாக மிஷனரிமார்களுக்கு இது பெரும் சவாலாக இருந்தது.

1877களில் ஏற்பட்ட பெரும் பஞ்சம் தேசத்தை உலுக்கியது லட்சக்கணக்கானோர் செத்து மடிந்தனர். மிஷனரிமார்கள் பலர் தங்கள் சொந்த நாட்டிற்கு திரும்பி சென்றனர். ஒருசில தைரியம் நிறைந்த மிஷனரிமார்கள் மாத்திரம் தங்கி இறைப்பணியை மேற்கொள்ளவேண்டும் என உறுதியாக இருந்தனர், அப்பொழுது தான் தலித் மக்கள் படும் வேதனைகளை, கஷ்டங்களை கண்கூடாக பார்க்க நேர்ந்தது. மருத்துவ உதவிகளும், உணவு பகிர்தளிப்பதும் மிஷனரிமார்களின் தலையாய கடமையாக நினைத்தனர். தலித் மக்கள் தங்களின் வறுமையை போக்க தங்களுக்கு இருந்த சிறு விளைநிலங்களை உயர்குல மிராசுதார்களுக்கு கொடுத்துவிட்டு உணவு மற்றும் தானியத்திற்காக அவர்களிடம் அடிமைகளாகவும், மிகவும் கீழ்த்தரமாகவும் நடத்தப்பட்டனர். தலித் மக்கள் படும் பாடுகளை கண்டு மிஷனரிமார்கள் மிகவும் வேதனையுற்றனர். அப்போதைய தருணத்தில் சமய பணிகளை காட்டிலும் சமுதாய பணிகளே முக்கியம் என கருதினர், ஆனால் தங்கள் சங்கத்தின் மூலம் கொடுக்கப்பட்ட செலவு திட்டம் (Budget) போதியதாக இல்லாததால் தினம் தினம் தேவைப்படும் செலவினங்களுக்காக கஷ்டப்பட்டனர். வில்லியம் கௌடி அவர்கள் அப்பேற்பட்ட சூழ்நிலையில் தன்னுடைய ஒருவேளை உணவை கூட உண்ணாமல் அந்த பணத்தை மருத்துவ பணிகளுக்கு பயன்படுத்தினார்.



அருட்பணி . வில்லியம் கௌடி

**Two fold Ministry**:

மிஷனரிமார்களுக்கு சமய பணிகளும் ( தனிமனிதனின் மனமாற்றமும் ) சமுதாய பணிகளும் தலையாய கடமையாகவும், மேலும் இப்பேற்பட்ட பிரச்சனைகளின் விடுதலைக்காக எப்பொழுதும் தயார் நிலையில் இருக்க வேண்டும் என கௌடி வலியுறுத்தினார்.

1890களில் மற்றுமொரு கொடிய பஞ்சம் ஏற்பட்டபோது நாட்டில் பல்வேறு இடங்களில் நீர் நிலைகளுக்காகவும், தானியம் மற்றும் உணவின் தேவைகளுக்காகவும் அநேக போராட்டங்களும், பிரச்சனைகளும் தலைதூக்கின. சென்னை, காஞ்சிபுரம், செங்கல்பட்டு மற்றும் அதனை சுற்றியிருந்த பகுதிகளில் மிஷனரி பணிகளை மேற்கொண்டுவந்த மெத்தடிஸ்ட் மிஷனரி சங்கத்தை சார்ந்த அருட்பணி. வில்லியம் கௌடி மற்றும் ஸ்காட்லாந்து மிஷனரி சங்கத்தை சார்ந்த அருட்பணி. ஆடம் ஆண்ட்ரு அவர்களும் தலித் மக்கள் படும் பாடுகளுக்கு அரசாங்கத்தின் வாயிலாக தீர்வு கிடைக்க பெரும்பாடுபட்டனர்.

அடிமைகளாக தங்களையே விற்றுவிட்ட தலித் மக்களை உயர்குல மிராசுதாரர்கள் நாயை விட கேவலமாக நடத்தினார். மேல் சட்டை, காலணி அணியக்கூடாது, எதிரே வரக்கூடாது என பல்வேறு தடைவிதித்து தலித் மக்களை வெறும் உணவிற்காகவும் மிகமிக குறைந்த பணத்திற்காகவும் தங்கள் அடிமைகளாக பயன்படுத்தி வந்தனர்.

இவற்றை உற்று நோக்கிய மிஷனரிமார்கள் தலித் மக்களின் வாழ்க்கை தரத்தை முன்னேற்ற கல்வியும், சொந்த விளைநிலங்களை திருப்பி பெற்றால் மட்டுமே இந்த அடிமைத்தனத்தில் இருந்து விடுதலை பெறமுடியும் என தீர்மானித்தனர்.

எனவே அரசாங்கத்திடம் இப்பிரச்னைகளுக்கு தீர்வு காண அருட்பணி. ஜார்ஜ் மெக்கென்சி கோபன், அருட்பணி.மெய்னார்ட், அருட்பணி. வில்லியம் கௌடி மற்றும் அருட்பணி. ஆடம் ஆண்ட்ரு ஆகியோர் தங்கள் தங்கள் பகுதிகளின் பிரச்னையை ஆராய்ந்து அதற்கான விரிவான அறிக்கையை வில்லியம் கௌடி அவர்களின் தலைமையில் ஆளுநருக்கு 1892 அன்று சமர்ப்பிக்கப்பட்டது. அதிலே தலித்மக்கள் படும் பாடுகள், மிராசுதாரர்களால் படும் வேதனைகளை மிக தெள்ளத்தெளிவாக பதிவிட்டு அவர்களுக்கான விடுதலைக்கு கௌடி போராடினர். அப்போதைய பத்திரிகையான ஹிந்து,

மதராஸ் மெயில் வில்லியம் கௌடி அவர்களின் நில உரிமை மீறல்களுக்கான அறிக்கையை மிக நேர்த்தியாக சமர்ப்பித்ததை வெகுவாக பாராட்டியது.

கௌடி மற்றும் ஆடம் அவர்களின் பல்வேறு போராட்டங்களுக்கு முற்றுப்புள்ளியாக 1892 ஆம் ஆண்டு தலித் மக்களுக்கான நிலஉரிமை சட்டம் 1892 இங்கிலாந்து பாராளுமன்றத்தில் இயற்றப்பட்டு சுமார் 12.5 லட்சம் ஏக்கர் நிலங்களை அரசாங்கம் மீட்டு தலித் மக்களுக்கு கொடுக்கப்பட்டது. இந்நிலங்கள் பஞ்சமி நிலங்கள் என அழைக்கப்பட்டது. (பஞ்சமர்களுக்கு கொடுக்கப்பட்ட நிலம், பஞ்சமர்கள் என்றால் இழந்தவர்கள் என பொருள் )

தலித் மக்களின் வா வாதாரத்தை முன்னேற்ற அவர்களுக்கு நிலங்களை பெற்றுத்தருவது மட்டும் இல்லாமல் தலித் மக்களுக்கு விவசாயம், கல்வி, மருத்துவம், தொழில்நுட்பம், சுயதொழில் பயிற்சிகள் அளித்து தொழிற்சாலை போன்றவைகள் நிறுவி சுயமாக வாழவும் வளரவும் மிஷனரிமார்கள் உதவிபுரிந்தனர். இன்றும் பல்வேறு மிஷனரிகள் துவக்கிய பள்ளிகள், கல்லூரிகள் அவர்களின் பெயர்களை தாங்கி நிற்கிறது.

அவர்களின் தியாகமும் தலித் மக்களின் மீதான கரிசனையும் இன்று நமக்குள் உள்ளதா என ஒரு நிமிடம் ஆராயவேண்டும். இன்றும் அநேக இடங்களில் கிறிஸ்தவத்திலேயே சாதிகளால் வேறுபட்டு கிடந்தால் நாம் எப்படி கிறிஸ்துவின் பிள்ளைகளாய் இருப்போம். அன்று உயர்குல மக்களால் ஒடுக்கப்பட்ட தலித் மக்கள் இன்று திருச்சபைகளிலும். திருப்பணிகளில் ஓரங்கட்டப்படுவதை பார்க்கும்போது மிஷனிமார்கள் பட்ட கஷ்டங்கள் வீணானதோ என ஒரு நிமிடம் சிந்திக்க தோன்றுகிறது.



அருட்பணி. ஆடம் ஆண்ட்ரு

***சாதியினை களைவோம் !! அனைவரையும் சமமாய் நடத்துவோம் !! கடவுளுக்கு பிள்ளைகளாவோம் !!***



# இந்திய சமூகச் சீரமைப்பில் கிறித்தவம்

Dr ஜான்சி பால்ராஜ்
வன்னியன் குடியிருப்பு

உலகில் வெகுசன முன்னணி சமயமான கிறித்தவம் மனிதகுலத்திற்கு நல்கிய ஆற்றல் மற்றும் பண்பாட்டுத் தாக்கங்கள் அளப்பரியது.

ஆரம்பத்தில் மனிதனின் நம்பிக்கைகளையும் மனோபாவங்களையும் திடப்படுத்த உதவிய நெறிமுறைகளற்ற சமய நம்பிக்கைகள் பின்னர் மனிதன் தனது சாதி, சமூக, பொருளாதார செல்வாக்கை வெளிப்படுத்தும் மதிப்பீட்டு நிறுவனங்களாகி நின்றன.

மதங்களின் கொள்கைகளும் பின்பற்றும் வழிமுறைகளும் அந்தந்த சமூகத்தளங்களின் ஆதிக்க நிலையிலிருந்தோரின் வடிவமைப்புகளுக்கேற்ப வளைந்து கொடுக்கத்தக்கதாகவே மாறிப் போயிருந்தன. இந்நிலைப்பாடு அரசியல் மற்றும் பொருளாதார நிலைகளில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் வாழ்க்கை முறைகளைக் கடினமாக்கியது. காலப் போக்கில் சமயங்களில் ஏற்படுத்தப்பட்ட பக்தியின் வெளிப்பாட்டு முறைகளாக பல்வேறு சமயச் சடங்குகளினால் மக்கள் அல்லலுற்று புலம்பும் நிலையேற்பட்டது.

இந்நிலைப்பாடு உலகளாவிய நிலையாகவே மனிதச் சமூகத்தில் இருந்தும் வளர்ந்தும் வந்த நிலையில்..

கி.பி முதலாம் நூற்றாண்டில் எழுந்த ஆபிரகாமிய மத (ஓரிறைக் கொள்கை) அடிப்படையிலான கிறித்தவ மத கோட்பாடுகளும் நம்பிக்கைகளும் மனித மனங்களை இளைப்பாற செய்ததாக இருந்தது. அத்தோடு தனிமனிதனின் தன்மானத்தை அவமதிக்கும் அசமத்துவத்தை, எதிர்க்கும் மையநோக்குடைய

அதன் கொள்கைகள் அதன் பெரும் வளர்ச்சிக்கும் பரவலுக்கும் காரணமாக இருந்தது.

இறைவனுக்கு அடுத்து மனிதர்கள் அனைவரும் சமமானவர்களே என்பதை எடுத்துரைத்து, சமூகப் படிநிலைகளைச் சமநிலைப்படுத்த முயன்ற கிறித்தவத்தின் சாராம்சம் மனிதகுல வரலாற்றில் புது மனப்பான்மைகளையும் முற்போக்கான சிந்தனைகளையும் ஏற்படுத்தியது.

கிறித்தவ மார்க்க வழிமுறைகள் தனித்தாள் ஒழுக்கத்தையும் சுதந்தரத்தையும் ஒருசேர வலியுறுத்தியது. இதனால் கிறித்தவத்தைப் பின்பற்றுவது மனித நாகரீகத்தின் உச்சம் தொடும் பயணத்தில் ஒரு மைல்கல்லாகவே இன்றும் இருந்து வருகிறது.

இந்தியாவில் கிறித்தவம் கி.பி 14ம் நூற்றாண்டில் ஐரோப்பியக் கிறித்தவ மிஷனெரிகளால் முன்னெப்போதுமில்லாத வேகத்தில் பரவி ,இந்தியக் கலாச்சாரமேம்பாடும் துளிர்விடத் தொடங்கியது.

முதற்கண் பண்பாட்டு சீரமைப்பின் அதிசக்தி வாய்ந்த ஆயுதமான கல்வி ஒரு குறிப்பிட்டச் சாதியினருக்கு மட்டுமே கிடைத்து வந்த நிலை மாறி அனைத்து தரப்பினருக்குள்ளும் ஊடுருவியது.இதன்மூலம் ஏற்கெனவே இருந்துவந்த ஒருசார்பான சமூக மதிப்பீடுகள் ஆட்டங்கண்டன.

பெண் கல்வியின் அவசியம் வலியுறுத்தப்பட்டு சமத்துவ எண்ணங்கள் ஆங்காங்கே தலைத்தூக்கின. ஐரோப்பியர்களான கிறித்தவ மிஷனெரிகள் வெறுமனே சமயத்தை மட்டுமே பரப்பாமல் மக்களின் அறியாமையை அகற்றும் பல்வேறு சீரியப் பணிகளையும் செய்தனர். இதன் மூலம் கிறித்தவத்தை ஏற்றவர்களிடம் மட்டுமல்லாமல் ஒட்டுமொத்த சமூகமும் விழிப்படைய தொடங்கியது. கி.பி 1578 ஆம் ஆண்டு கிறித்தவ மிஷனெரி, அறிஞர் அண்ட்ரிக் அடிகளார் மூலம் புன்னைக்காயலில் அச்சுக் கூடம் ஏற்படுத்தப்பட்டது. இது தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும் மிகப்பெரிய சமூக அறிவுப் புரட்சிக்கும் வித்திட்டது எனலாம்.

தமிழகத்தைப் பொறுத்தவரை தமிழ் மொழி கிறித்தவத்தால் புதிய பரிமாணமே அடைந்து செழித்தோங்கியது. முறைப்படி மொழிக் கற்றோர் மட்டுமே உய்த்துணரும் அளவில் இருந்த செய்யுள் வடிவ படைப்புகளால் எட்டாத கனிகளாக இருந்த மொழித்திறன் கிறித்தவ சமயப்பரப்புனர்களால் உரைநடை வடிவம் பெற்றது. இதனால் பாமரரும் அறிந்து தம் அறிவின் எல்லையை விசாலமாக்கும் அளவிற்கு புத்தெழுச்சிப் பெற்று வெற்றி பெற்றது. அதற்கு முன்பு தமிழ் மொழியில் பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்குமிடையே இரு வெவ்வேறு மொழிகளுக்கேயிடையேயான வேறுபாடுகளை ஒத்த இடைவெளி இருந்து வந்தது.

ஒவ்வொரு சாதிப் பிரிவின் சமூகத்தவரும் தங்களுக்கே உரிய பேச்சு வழக்குகளை உருவாக்கி வைத்திருந்தனர். அதனைத் தங்களது அடையாளங்களாக கருதினர். இந்நிலை உரைநடை வளர்ச்சியால் சமநிலைப்பாட்டை அடையவேண்டியதாயிற்று. ஏனென்றால் உரைநடை வளர்ச்சி அனைத்து தரப்பினருக்குமான பொதுவான ஒரு எளிய பொதுநடையை உருவாக்கித் தந்தது.

முதலில் இப்புதிய எழுத்து வடிவம் வடமொழிச் சொற்கள் கலந்த மணிப்பிரவாள மொழிநடையாக இருந்தபோதும் தொடர்பயணத்தின் போது தமிழ் ஆர்வலர்களால் சீரமைக்கப்பட்டு உயிர்ப்படைந்து செழுமையடைந்தது.

இந்திய சமூகத்தின் மறுமலர்ச்சிக்கு அந்தந்த காலகட்டங்களில் ஏற்பட்ட பல்வேறு சமயங்களின் கொள்கைகளும் அதன் தாக்கங்களும் பங்களித்திருந்தாலும் கிறித்தவத்தின் வளர்ச்சிக்கான முயற்சிகளும் நடவடிக்கைகளும் அதன் செயற்பாட்டாளர்களால் ஒட்டுமொத்த இந்திய சமூகத்தின் கட்டமைப்புகளையே தகர்த்து புதிய கண்ணோட்டத்தையும் அறிவார்ந்த சமூகத்திற்கான தொடக்கத்தையும் உண்டாக்கியது என்பதில் எவ்வித மாற்றுக் கருத்தும் இருக்க இயலாது.

---

# தோட்டகாடு உபதேசியார் பிச்சைமுத்து லூக்கா ஐயர்

அருட்திரு பேராசிரியர் மா. தேவராஜ்,
கூடலூர், நீலகிரி

அருட்திரு பிச்சைமுத்து லூக்கா அவர்கள் நீலகிரி மக்களால் அன்போடு **தோட்டகாடு உபதேசியார்** என்று போற்றப்பட்டவர். இவர் அன்றைய அகன்ற திருநெல்வேலி மாவட்டம், இன்றைய தூத்துகுடி மாவட்டத்தின் திருச்செந்தூர் வட்டம் கடையனோடை கிராமத்தில் 1893ஆம் ஆண்டு மார்ச் 9ஆம் நாள் பிறந்தார். அக்கிராமத்திலிருந்த அருட்பணியாளர்களின் பள்ளியில் தொடக்க கல்வியை முடித்து, தூத்துக்குடி கால்டுவெல் பள்ளியில் தொடர்ந்து மேல் படிப்பு மற்றும் கல்வியியல் பயிற்சி முடித்து தனது சகோதரர் ஐசக் அவர்கள் மூலமாக குன்னூர் வந்து சேரந்தார். பின்னர் குன்னூரில் சி. எம். எஸ் திருச்சபை அருட்பணி சங்கத்தின் பள்ளியில் உயர் நிலை ஆசிரியராக பணிப்புரிந்தார்.

1923ஆம் ஆண்டு கிறிஸ்துவ திருப்பணிச் செய்ய வேண்டும் என்ற தீராத தாகத்தால் தம் பணியை ராஜினாமா செய்து விட்டு குன்னூரில் இயங்கி வந்த பாப்திஸ்து அருட்பணி திருச்சபையின் முழு நேர திருப்பணியாளராக விரும்பினார், இதனிடையே அருட்திரு தேவகரம் அவர்களின் பரிந்துரைப்படி அருடப்பணியாளர் அருட்திரு (கானோன்) மூர்ஹவுஸ் (Rev. (Lately Canon) H. A. D. Moorhouse) அவர்களால் முழுநேர உபதேசியராக (நற்செய்தியாளராக) அன்றைய சி.எம்.எஸ் இன்றைய சி.எஸ்.ஐ குன்னூர் குருசேகரத்தில் பணி நியமனம் பெற்றார்.

1923ஆம் ஆணடு முதல் 1940ஆம் ஆண்டு வரை குன்னூர் தூய யோவான் திருமுழுக்கர் தேவாலயத்தின் உபதேசியராக நியமிக்கப்பட்டார். இவர் கானோன் மூர்ஹவுஸ், அருட்திரு ராபர்ட்ஸ், போன்ற அருட்பணியாளர்களின் மேற்பார்வையிலும், அருட்திரு

தேவகரம், அருட்திரு மதுரநாயகம் போன்ற இந்திய குருமார்களின் மேற்பார்வையிலும் உபதேசியராக தம் திருப்பணியை நிறைவேற்றினார்.

இவரது ஊழிய முறை வியப்பாக இருக்கின்றது. குன்னூர் பகுதியில் மாதத்தின் நான்கு வாரங்களில் மாதத்தின் கடைசி ஞாயிறு ஆராதனையை குன்னூர் தேவாலயத்தில் நடத்தி ஏனைய ஞாயிறுகளில் தோட்டக்காடுகளில் ஆராதனை நடத்துவார். வியாழன் தோறும் ரேவன்ஸ்வுட்டில் உள்ள ஊழியர்களை சந்தித்து ஜெபக் கூட்டம் நடத்துவார். வெள்ளிக் கிழமை காலை லித்தனியா ஆராதனை நடத்திவிட்டு, முதல் வாரம் வெள்ளி மாலையில் கிளென்டேல், நான்சச், ஆர்செடின், அவாக்கா, டூரூக், பில்லூர், பென்காம் ஆகிய இடங்களுக்குச் சென்று செவ்வாய் மாலையில் இல்லம் திரும்புவார்.

இரண்டாம் வெள்ளி மாலை புறப்பட்டு பில்லிமலை, காட்டேரி, சட்டன், கிளன்கர்னி, கிரேக்மோர், கொலக்கொம்பை, வுட்லேண்ட்ஸ், டெரெமியா, வரை சென்று செவ்வாய் கிழமை இல்லம் திரும்புவார். மூன்றாம் வெள்ளி ஹாலாடா, தேவர்சோலை, மேலூர், சாம்ராஜ், குந்தா, தாய்சோலை, கோரகுந்தா வரை சென்று புதன் கிழமை மாலையில் இல்லம் திரும்புவார். நான்காம் வாரம் ஞாயிறு மாலை புறப்பட்டு கோடமலை, கரன்சி, ஆடர்லி, முத்திரி, சிங்காரா ஆகிய இடங்களுக்குச் சென்று செவ்வாய் கிழமை இல்லம் திரும்புவார். இது ஒரு தியாகத்தின் திருப்பணி மேற்கண்ட இடங்களுக்குச் செல்ல அந்நாட்களில் போதிய பேருந்துகளோ ஏனைய போக்குவரத்து வசதிகளோ இல்லாத காலக்கட்டம்.

ஆயர் அவர்கள் தன் வீட்டிலிருந்து ஊழியத்திற்குச் செல்கையில் ஒரு வெள்ளை பையில் சிவப்பு சால்வை, வேட்டி, சட்டை போன்றவைகளை எடுத்துச் செல்வார் தோட்டங்களில் கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களின் வீட்டு திண்ணைகளில் குளிரெனவோ மழை எனவோ பாராமல் திருப்பணியை முதன்மையாக வைத்து இரவுகளை கழிப்பார். இன்றும் தேயிலை மற்றும் காபி தோட்டங்களில் இவரால் கிறிஸ்துவிடம் வழிநடத்தப் பட்ட பலர் இதனை சாட்சியாக பகிர்கின்றனர்.

தேயிலைத் தோட்டங்களில் காலை வருகை பதிவு எடுக்கையில் (ரோல் கால் / Roll Call) என்பார்கள் அந்த நேரத்தில் காலை நற்செய்தி அறிவித்து தேயிலைத் தோட்ட தொழிலாளர்களை கிறிஸ்துவுக்கு நேராய் நடத்தினார். மலை நேரங்களில் நற்செய்தி துண்டு பிரசுரங்களை வழங்கி தம் திருப்பணியை நிறைவேற்றினார்.

குன்னூர் போதக சேகரம் திரு பிச்சைமுத்து லூக் அவர்களது கடின உழைப்பைக் கருத்தில் கொண்டு 1940ஆம் ஆண்டு இவரது வைராக்கியத்தையும் விருப்பத்தையும் நிறைவேற்ற ஆறு மாத இறையியல் சிறப்பு பயிற்சிக்காக நாசரேத்துக்கு அண்மையிலுள்ள திருமறையூர் இறையியல் கல்லூரிக்கு அனுப்பினார்கள். பயிற்சி முடித்தவுடன், அருவங்காடு தூய அந்திரேயா தேவாலயத்தில் ஆயராக நியமிக்கப்பட்டார், இவருக்கு 1941ஆம் ஆண்டு ஜீன் மாதம் 8ஆம் நாள் குன்னூர் தூய யோவான் திருமுழுக்கர் தேவாலயத்தில் உதவி குருவானவராக (டீக்கனாக, Deacon) டோர்னகல் பேராயர் அருட்பெருந்திரு. அசரியா அவர்கள் அருட்பொழிவுச் செய்தார்.

இதைத் தொடர்ந்து, 1942ஆம் ஆண்டு நவம்பர் மாதம் சென்னை பேராயத்தின் பேராயர் அருட்பெருந்திரு ஹாலீஸ் அவர்கள், இவரை குருவானவராக சென்னையில் அருட்பொழிவு செய்து, அருவங்காடு தூய அந்திரேயா தேவாலயத்தின் குருவானவராக நியமித்தார்.

அருவங்காடு தூய அந்திரேயா தேவாலயத்தார் அருட்திரு லூக் அவர்களையும், அருள்திருவாளர்கள் ஜே. எம். டி. பர்னபாஸ், எம். பென்ஜமீன், துரைப்பாண்டியன் ஆகியோரை குருத்துவ திருப்பணிக்கு செல்ல ஊக்கப்படுத்தினார்கள் என்பது இங்கு சிறப்புடன் நோக்கத்தக்கதாகும்.

அருவங்காடு தேவாலயத்தின் மேற்பார்வையில் அருட்திரு லூக்கா அவர்கள் பெரும் முயற்சி மேற்கொண்டு சோகத்தொரெ, காட்டேரி, முத்தநாடு, பவானி தோட்டம் ஆகிய இடங்களில் குடியிருந்த மக்களின் பயன்பாட்டிற்காக தோட்ட அதிபர் ஏ. வி. தாமஸ் அவர்களின் பொருளாதார உதவியுடன் சேலஸில் புனித தோமா தேவாலயம் கட்டி மங்களப் படைப்புச் செய்யப்பட்டது. பின்னாட்களில் சேலாஸ் தனி போதக சேகரமாக உயர்த்தப்பட்டு, செயல்படுகின்றது.

ஆயர் அவர்கள் முத்த நாட்டில் தேயிலைத் தொழிற்சாலை கட்டப்பட்டு திறப்பு விழா கொண்டாடின போது தொழில் சாலைக்குச் சென்று ஆசீர் வழங்கினார். மக்களாடு மக்களாக இருந்து தேயிலை காபி காடுகளுக்குச் சென்றார்.

1950ஆம் ஆண்டு பேராயர் இவரை கோத்தகிரி குருசேகரத்திற்கு மாற்றினார், கோத்தகிரியில் இவர் அனைத்து தேயிலைத் தோட்டங்களுக்கும் சென்று மக்களை சந்தித்து நற்செய்தி அறிவித்து அவர்களது ஆன்ம ஈடேற்றத்திற்காய் பாடுப்பட்டார். கோத்தகிரி குரு சேகரத்தில் உள்ள அனைத்து குடும்பங்களையும் குறைந்தது இரண்டு மாதத்திற்கு ஒரு முறையாவது சென்று வீடு சந்திப்புச் செய்து அவர்களின் அனைத்து இன்ப துன்பங்களிலேயும் பங்கெடுப்பார். ஒரு குறிப்பிட்டக் காலத்தில் கோத்தகிரிப் பகுதியில் பெரும் பஞ்சம் வரவே ஆயர் அவர்கள் தோட்ட அதிபர்களின் மூலமாக பாதிக்கப்பட்ட திருச்சபையின் திருமக்களுக்கு, அரிசி, மாவு, உடை போன்ற பொருள் உதவிகள் பெற்று உதவிச் செய்தார்.

கோத்தகிரி கிறிஸ்து நாதர் தேவாலயத்திலும், தூய லூக்கா தேவாலயத்திலும் தொடர்ந்து ஆராதனைகள் நடத்தினார், மாதம் ஒரு முறையாகிலும் அரசு மருத்துவமனைக்கும், கோத்தகரியில் இருக்கின்ற ஏனைய மருத்துவமனைகளுக்கும் சென்று நோயாளரை சந்தித்து ஆறுதல் கூறி பிரார்த்தனைச் செய்து வருவார்.

1952ஆம் ஆண்டு இவரது திருப்பணி குன்னூருக்குத் தேவைப்பட்டப்படியால் கோத்தகிரியிலிருந்து தூய யோவான் திருமுழுக்கர் தேவாலயத்தின் ஆயராக நியமிக்கப் பட்டு 1959ஆம் ஆண்டு பணி மூப்பு ஓய்வுபெறும் வரை ஏழு ஆண்டுகள் சிறப்பாக திருப்பணியாற்றி 1959ஆம் ஆண்டு ஓய்வுப் பெற்று தன் சொந்த ஊரான கடையனோடைக்குச் சென்று அதே ஆண்டு ஆகஸ்ட் மாதம் 29 ஆம் நாள் நித்திய இளைப்பாறுதலுக்குள் சென்றார்.

ஆயர் அவர்கள் தனது திருப்பணியின் பெரும்பகுதியை நீலகிரி மாவட்டத்தில் தேயிலை மற்றும் காப்பி தோட்டங்களிலேயே செலவிட்டதினால் "**தோட்டக் காடு உபதேசி**" என்ற சிறப்பைப் பெற்றார். நீலகிரி மாவட்டத்திலுள்ள தேயிலை மற்றும் காபித் தோட்டங்களில் பலர் புறவின மக்களை கிறிஸ்துவின் திருச்சபைக்கு நேராக நடத்தினார்.

# திரும்பிப் பார்ப்போம்!

மோ ஜோ,
முதலூர்

கிறிஸ்தவ மிஷனரிகள் அவர்கள் பணிசெய்கிற மக்கள் கூட்டங்களின் கலாச்சாரத்தையும், பண்பாட்டையும் அழிப்பவர்களென்ற ஒரு குற்றச்சாட்டு சிலரால் நம் தேசத்தில் நெடுங்காலமாக வைக்கப்பட்டுவருகிறது. மிஷனரிகள் பணத்திற்காக மதமாற்றம் செய்பவர்கள், கலாச்சாரத்திற்கு எதிரானவர்கள் என்று 'அவர்கள்' பிரச்சாரம் செய்துகொண்டிருக்க, திருச்சபையாகிய நாம் மிஷனரிகள் நம் சமுதாயத்திற்கும், காலாச்சாரத்திற்கும் செய்த காரியங்களை சரியாய் அறிந்து வைத்திருக்கிறோமா, மற்றவர்களுக்கு எடுத்துக்கூறுகிறோமா என்பது கேள்விக்குறியாகத்தான் இருக்கிறது. எனவே, இன்று மிஷனரி சீகன்பால்க் தமிழ்மொழி வளர்ச்சிக்காக என்ன செய்தாரென்று பார்ப்போம். 'மொழி' என்பது ஒரு மக்கள் இன கலாச்சாரத்தின் மிகப்பெரும் அடையாளம். தாய்மொழி அல்லாத ஒரு மொழியை கற்பதென்பது எளிதல்ல. அதிலும், அந்த மொழியில் புலமை பெறுவது மிகவும் கடினம். ஜெர்மனியிலிருந்து தமிழ்நாடு வந்த சீகன்பால்க் தமிழைப் படித்து, புலமை பெற்று, தமிழ்மொழி வளர்ச்சிக்காக என்ன செய்தார் என்பதைக் குறித்து சுருக்கமாய்ப் பார்க்கலாம்.



**தமிழக வருகை:**

சீகன்பால்க் 1682ஆம் ஆண்டு ஜெர்மனியில் பிறந்தார். டென்மார்க் நாட்டு இளவரசர் நான்காம் பிரடரிக், தமிழர்கள் இயேசுவை அறிந்துகொள்ளவேண்டுமென்று விரும்பி, சீகன்பால்க்கையும், அவரது நண்பர் ஹென்றி புளுச்சோவையும் தமிழ்நாட்டிற்கு அனுப்பி வைத்தார். 1706ஆம் ஆண்டு, ஜூலை 9ஆம் தேதி சீகன்பால்க்கும், புளுச்சோவும் தரங்கம்பாடியை வந்தடைந்தனர்.

**தமிழைக் கற்றல்:**

சீகன்பால்க் தரங்கம்பாடியில் இருந்த தமிழர்களிடம் நன்கு பழகி, தமிழ்மொழியின் பல்வேறு சிறப்புகளைப் புரிந்து கொண்டார். அவர் காலத்தில், தமிழகத்தில் வெறும் 2 சதவிகித மக்களே படிக்கவும், எழுதவும் தெரிந்திருந்தனர். அந்தக் காலத்தில் இந்துக் கோவில்களில் இருந்த மண்டபங்களில் பள்ளிகள் நடத்தப்பட்டன. அத்தகைய மண்டபம் ஒன்றில்தான், சீகன்பால்க் பள்ளி மாணவர்களோடு சேர்ந்து ஆர்வமுடன் தமிழைக் கற்றார். மேலும், தன் வீட்டிற்கு குழந்தைகளையும், தமிழ் ஆசிரியரையும் வரவழைத்து, ஆசிரியரை பாடம் நடத்தச் சொல்லி, குழந்தைகளோடு இணைந்துத் தமிழைக் கற்றார்.

அக்காலத்தில் தரங்கம்பாடியில் வசித்துவந்த 'அலப்பா' என்ற தமிழர் போர்த்துகீசிய, டச், டேனிஷ் மற்றும் ஜெர்மன் மொழிகளில் புலமை பெற்றிருந்தார். அவரிடமிருந்தும் சீகன்பால்க் தமிழைக் கற்க முயன்றார். இக்காலத்தில், அவர் தமிழ் நூல்களையும், ஓலைச்சுவடுகளையும் சேகரிக்க ஆரம்பித்தார். தமிழ் நூல்களை மட்டுமே படித்தார். மக்களோடு தமிழிலேயே பேசினார். ஒருநாளுக்கு, 8 மணி நேரம் தமிழ் கற்க செலவிட்டார். ஒரு மொழியை நன்கு கற்றுக்கொள்ள அதன் இலக்கணத்தைப் படிப்பது அவசியம் என்று புரிந்துகொண்டு, தமிழ் இலக்கணத்தை கவனம் செலுத்திப் படித்தார்.

**தமிழுக்காற்றிய தொண்டு:**

1. சீகன்பால்க் தமிழ்மொழியில் 'பரிசுத்த வேதாகமத்தை' மொழிபெயர்த்து, ஜெர்மனியில் இருந்து அச்சு இயந்திரத்தைக் கொண்டுவந்து, அதை அச்சிட்டு வெளியிட்டார்.

2. 'தமிழ் மொழி இலக்கண நூல்' என்ற 128 பக்க புத்தகத்தை வெளியிட்டார். தமிழ்மொழி இலக்கணத்தைப்பற்றி, ஒரு ஜெர்மானியர் புத்தகம் வெளியிட்டது சாதனை தானே??

3. 20,000 தமிழ் வார்த்தைகளுக்கு விளக்கம் கொடுத்து ஒரு 'உரைநடை நூலை' வெளியிட்டார். இதற்காக, அவர் 100 தமிழ் நூல்களைப் படித்தாராம்.

4. 'உலகநீதி', 'கொன்றைவேந்தன்' ஆகிய நீதிநூல்களை 'ஜெர்மன்' மொழியில் மொழிபெயர்த்தார். இதன்மூலம் தமிழின் பெருமையை ஜெர்மானியர் அறியசெய்தார்.

5. 119 தமிழ் புத்தகங்களை சேகரித்து 'மலபார் மக்களின் புத்தகத் தொகுப்பு' என்ற பெயரில் நூல் வெளியிட்டார்.

6. தமிழர்களின் மத உணர்வுகளைப் புரிந்து கொண்டு, 'தென் இந்தியக் கடவுள்களின் வம்ச அட்டவணை' என்ற நூலை வெளியிட்டார்.

7. தமிழர்களின் மருத்துவ முறைகள் பற்றி ஆராய்ச்சி செய்து, பல குறிப்புகளை எழுதினார்.

தமிழர்களின் நாகரீகத்தைப்பற்றி தரக்குறைவாகக் கருதிவந்த ஜெர்மன் மக்களின் எண்ணத்தை மாற்றி, அவர்களின் ஆராய்ச்சி கண்கள் தமிழ்மொழியின்மீது படர வித்திட்ட முதல் பேரறிஞர் சீகன்பால்க் தான். அவரின் உழைப்பாலும், கடிதத் தொடர்பாலும், ஜெர்மன் பல்கலைக்கழகத்தில் 'தமிழ்மொழி' கற்பிக்க ஆரம்பிக்கப்பட்டது.

அன்பான வாசகர்களே! மிஷனரி சீகன்பால்க் தமிழ் மொழிக்காற்றிய தொண்டை நாம் நினைவுகூறுவோம். பொதுவெளிகளில், சமூக வலைத்தளங்களில் இதைப்பற்றி பேசுவோம். மிஷனரிகள் கலாச்சாரத்தை அழிப்பவர்கள் என்ற தவறான குற்றச்சாட்டு இத்தகைய ஆதாரங்கள் மூலம் தவிடுபொடியாகட்டும். ஒட்டுமொத்த இந்தியாவின் வளர்ச்சிக்காக எவ்வளவோ தியாகங்களைச் செய்த மேலைநாட்டு மிஷனரிகள் அவப்பெயர் சுமப்பது எவ்விதத்தில் நியாயம்? சீகன்பால்க்கை நம் பகுதிக்கு மிஷனரியாக அனுப்பித் தந்த தேவனுக்கு நன்றி கூறுவோம். அழியும் ஆத்துமாக்களைப் பற்றிய பாரம் நம்மையும் ஆட்கொள்ளட்டும்.

# CSI வேலூர் பேராய மிஷனரிகளின் சமூகப் பணி

அருள்திரு. லாசரஸ் செல்வநாதன், காட்பாடி, 9442078744

1863ஆம் ஆண்டில் ஆற்காட்டில் புபுனி (அமெரிக்கன் ஆற்காடு மிஷன்) எனத் தொடங்கிய அமெரிக்காவின் சீர்திருத்த சபை மூலம் மிஷனரிகள் ஆற்றிய பணிகள் பல்வகையாம். மதுரை பகுதியிலும், சென்னை பகுதியிலும் வேலூர் பகுதியிலும் சுவிசேஷம், மருத்துவம், கல்வி, சமூக நலம், விவசாயப் பள்ளி, தச்சுப்பள்ளி, தையல் பள்ளி, இறையியல் செமினரி, ஆசிரியப் பயிற்சிப் பள்ளி எனப் பல்வகையில் சமூகப் பணிகளை சிறப்புற செய்தனர்.

**சுவிசேஷப் பணியுடன் கல்விப் பணி**

விழுப்புரம், திண்டிவனம், திருவண்ணாமலை, வந்தவாசி, ஆரணி, வேலூர், குடியாத்தம், ஆம்பூர், வாணியம்பாடி, திருப்பத்தூர், ஆற்காடு, இராணிப்பேட்டை, வாலாசா, சித்தூர், பலமனேர், பாக்காலா என முந்தைய தமிழகத்தை உள்ளடக்கி ஏழை, எளிய கிராம மக்களிடம் இயேசுவை விளக்கி, திருச்சபைகளைத் தோற்றுவிக்க அரசு உதவியின்றி ஆசிரியர்களைக் கொண்டு ஆரம்பப் பள்ளிகளைத் தொடங்கினர். இதற்கான இருவருட ஆசிரியப் பயிற்சிப் பள்ளியும் (UTTS), மூன்று வருட இறையியல் பள்ளியும் (ATS) அளித்து ஆண், பெண் இருபாலர்க்கும் பயிற்சிக்குப்பின் கிராமங்களில் இறைப்பணியும் கல்விப் பணியும் ஆற்றினர்.

பட்டணங்களில் உயர்நிலைப்பள்ளிகள் இருபாலர்க்கும் தொடங்கி, பயில விடுதிகளையும் தோற்றவித்து கிராமப் பிள்ளைகளின் கல்வியை வளர்த்தனர். கிராமங்களில் மேல் சாதி, கீழ்சாதியினரிடையே நிலம் வாங்கி பள்ளிகள் அமைத்து கிராமமே வேற்றுமையின்றி கல்வி பெற செய்ததுடன் கிறிஸ்தவ பாடல் வேதம் ஜெபத்துடன் பள்ளி நடத்தி கிறிஸ்தவரல்லாதவர்க்கும் சுவிசேடப் பணியாற்றினார். பள்ளியிலேயே ஞாயிறு வழிபாடு நடத்தினர். மூன்று வருட இறையியற்கல்வி பெற்ற ஆணாசிரியர் உபதேசியாராகவும், பெண்ணாசிரியர் பெண்கள் சங்கமும் நடத்தினர். ஜான் பீட் என்பவர் 'தபால் பெட்டி 66' என தபாலில் சுவிசேட பிரசாரம் செய்தது புதுமையே. நம் நாட்டு ஊழியர்களை போதகர்களாக்கி திருச்சபைப் பணி விரிவடையச் செய்தனர். கிராமப் பிள்ளைகளை பள்ளிப் படிப்புடன் கல்லூரி படிப்புப் பெற ஊரீசு கல்லூரி தொடங்கினர். திருமறை படிக்க கல்வியின் தேவையை சிறப்பித்தனர்.

**மருத்துவப் பணி**

பணி, பஞ்ச காலத்து சென்னை ராயபுரம் ஆலயத்தை மருத்துவமனையாக இம்மிஷனரிகள் பணியாற்றினர். பின் வாலாசா, இராணிப்பேட்டையில் டாக்டர். ஜான் ஸ்கடர் தம் குடும்பத்தார் அனைவருடன் மருத்துவப் பணி தொடங்கி, மருத்துவமனைகளை, வாலாசா, இராணிப்பேட்டை, வந்தவாசி, முட்டத்தூர், வேலூர், மதனப்பல்லியில் நிறுவி பணியாற்றினர். டாக்டர். ஐடா ஸ்கடர் தொடங்கிய CMC இன்று உலக சிறப்புடன் செயல்படுகிறது. மதனபல்லி மருத்துவ கல்லூரி மருத்துவமனையும் தாதிகளுக்கும், மருத்துவ பணிகளுக்கும், மருத்துவர்களுக்கும் பயிற்சியளித்து இன்றும் செயல்படுகிறது. கரிகிரியில் தொழுநோய்க்கும், குடியாத்தத்தில் தோல்நோய்க்கும், பாகாயத்தில் மனநோய்க்கும், கண்ணாஸ்பத்திரியும், காசநோய்க்கு மதனப்பல்லியிலும், கிராம மக்களுக்கு காவனூரில் RUHSA பணியும், நடமாடும் மருத்துவத் துறை தொடங்கியும் பணியாற்றினர். பெண்கள் தாதியர் பயிற்சி, மருத்துவர் (இருபாலர்க்கும்) பயிற்சியும் சி.எம்.சி. தருகிறது. இங்கில்லாத மருத்துவத்துறை ஒன்றுமில்லை எனலாம். இங்கு பயின்று மேனாடுகளுக்கும் சென்று எண்ணற்ற ஏழைகள் பெருஞ் செல்வந்தர்களாகியுள்ளனர்.

**சமூகப் பணி**

தச்சுப்பள்ளி கல்விப் பணியில் பின்தங்கினோர்க்கு, காட்பாடியில் தச்சுப் பணி பள்ளி (KI) அமைத்து, பணியாளர்கள் கிராமங்களிலிருந்தே வர தாமதமானாலும் காட்பாடியிலுள்ள சாதிக்காரர்கள் கிறிஸ்தவர்களுக்கு வாடகைக்கு வீடு கொடுக்காததால் தேக்கு மரத்தாலான 36 வீடுகள் கட்டி மிஷனரி ராட்சேபரின் துணைவியார் (பர்னீஸ்) பெயரிட்டார். இன்று அதுவே பர்னீஸ்புரம். 36 ஏக்கர் நிலம் வாங்கி அவர்கள் குடும்பத்தாரும் விவசாயப் பணிக்கு கொடுத்து, 36 பேர் கொண்ட பணியாளர் மூலம் மரவேலைகள் செய்து வெளிநாடுகளுக்கும் அனுப்பியுள்ளனர்.

**விவசாயப் பண்ணை**

மிகவும் கல்வியில் பின்தங்கியவர்க்கு மேம்பட்ட விவசாய கல்வியும், மாடு, பன்றி, கோழி வளர்ப்பும், மர வளர்ச்சியும் மேற்கொள்ள இந்நாட்டின் முதல் விவசாயப் பண்ணையும் (KAI) நீர் வளம் கண்டு கசம் எனப் பெயர் கொண்ட விவசாயப் பண்ணை 360 ஏக்கரிலும் அமைத்து டெவலாய்ஸ் மிஷனரி நடத்தினார்.

**தையல் பள்ளி**

பெண்களுக்கென ஆந்திராவில் பலமனேரில் தையல் பள்ளி (WIS) 50 ஏக்கரில் தொடங்கி விடுதியுடன் பெண்களுக்கு தையல் (எம்ராய்டரி, கிராஸ் ஸ்டிச், கெட்டித் தையல்) கற்பித்து, வீடுகளுக்குச் சென்றபின் வீட்டிலேயே பணியாற்றி வருவாய் பெற வழி செய்தனர். மிஸ். ஜங்வார்டு, காய் போன்ற மிஷனரி கன்னிகளால் நடத்தப்பட்டது. N.M.S. மூலம் திருப்பத்தூர், ஜவ்வாது மலை, ஏலகிரியில் சமுதாயப் பணி, சமயப் பணி நடைபெற்று வருகிறது. MUT நிறுவனம் வேலூரில் மினஷரிகளின் நலனுக்காக தொடங்கி நடந்து வருகிறது.

ஜெயில் ஊழியம் பல காலமாய் தொரப்பாடி மத்திய சிறையில் நடந்து வருகிறது. பஞ்சகாலத்தில் அமெரிக்காவிலிருந்து, கோதுமை, ஓட்ஸ் (பால் பவுடர், பேரீச்சம் பழம், சீஸ்) முதலியன கிராம பள்ளி மாணவர்களுக்கும் ஏழைகளுக்கும் வழங்கப்பட்டது.

இன்று வேலூர் பேராயம் 120 ஆயர்களையும், 150 குருசேகரங்களையும், 800க்கும் மேற்பட்ட கிராம சபைகளையும் கொண்டு தமிழ்நாட்டிலும், ஆந்திராவிலும் இறைப்பணியாற்றி வருகிறது.

# தென் தமிழகத்தில் சமூக பணியில் சிறப்பான பங்களிப்பை தந்த இயேசு சபை மிஷனரி மற்றும்

## திரு இருதய சகோதர சபை நிறுவனர் தந்தை கௌசானல் அடிகளார்

**தோற்றம்**

தெற்கு பிரான்சில் உள்ள அவெய்ரோன் எனும் மாவட்டத்தில் மாசியர் என்ற ஊரில் தந்தை அதிரியான் கௌசானல் அடிகளார் அவர்கள் அந்துவான் கௌசானல் – மரிய ஆன் தெபார் தம்பதியரின் மகனாக 27.09.1850 இல் பிறந்தார். அவரோடு பிறந்தவர்கள் அவரோடு சேர்த்து மொத்தம் 9 (6+3)பேர் (பிரான்சிஸ், பிரெடரிக், யூஜின், ஜோசப், அதிரியான், ஜெரோம், மரியா, எமிலி, யூபிரேசி)நோயுற்ற நிலையில் தந்தை கௌசானல் பிறந்ததால் பிறந்த அன்றே அவருக்கு திருமுழுக்குக் கொடுக்கப்பட்டது. சிறுவயது முதல் தாயாரிடம் அதிகமாக அன்பு செலுத்திய தந்தை கௌசானல் அவர்கள் சிறுவயதிலேயே போட்டி விளையாட்டில் பங்கு பெறுவதிலும் அதில் பரிசு பெறுவதிலும் சிறப்பிடம் பெற்றார். பள்ளிப் படிப்பை காட்டிலும் வேதாகம கல்விக்கே அவர் முக்கியத்துவம் கொடுத்தார்.

**இறைகல்வி**

தந்தை கௌசானல் அவர்கள் லோட்டஸ் நகரிலிருந்த ஆயத்த குருமடத்தில் மூன்று ஆண்டுகள் சேர்ந்து ஆயத்த குருத்துவ கல்வியைக் கற்றார் 1875 இல் அதற்கான பட்டத்தை பெற்றார்.

**நவ சன்னியாச போதக பயிற்சி**

31. 12 .1875 இல் போ என்ற ஊரில் அமைந்திருந்த இயேசு சபை நவ சந்நியாச மடத்தில் நவ சன்யாச போதகராகும்படி சேர்ந்தார். இந்த துறவற மடத்தில் அக்காலத்தில் தந்தை கௌசானல் அவர்களுடன் பயிற்சி பெற்றவர்களில் ஒருவர் பிற்காலம் மதுரை இயேசுசபை தலைவராய் திகழ்ந்த தந்தை வெர்டியர் அவர்கள் ஆவார். நவசன்னியாச கல்வி காலத்தில் இரண்டாம் ஆண்டில் துலா நகரின் அருகே உள்ள மேரி டேஸ் சாம்ப் என்ற இடத்திற்கு மாற்றப்பட்டார். தந்தை கௌசானல் அவர்களுக்கு மூன்றாம் ஆண்டு நவ சன்யாச பயிற்சி லண்டன் அருகில் அமைந்திருந்த சாம்சன் நகரில் கொடுக்கப்பட்டது. இங்கு ஆங்கில மொழியில் நன்கு புலமை பெற்றார்.

**இயேசு சபை மிஷனரியாக தமிழகம் வருதல்**

16.11.1888 இல் இயேசு சபை மிஷனரியாக மதுரை மறை மாவட்டத்தில் பணி செய்வதற்காக கடல் மார்க்கமாக கப்பல் மூலம் புதுச்சேரி வந்து சேர்ந்தார். அக்காலத்தில் தூத்துக்குடியில் தங்கி பணி செய்து வந்த இயேசு சபை மிஷனரி லோகண்டோ உடல் நலக்குறைவு காரணமாக பிரான்சு செல்ல நேரிட்டது. எனவே அந்த இடத்தில் ஊழியம் செய்யும்படி தந்தை கௌசானல் தூத்துக்குடிக்கு அனுப்பப்பட்டார்.

**தூத்துக்குடியில் கல்விப்பணியில் சமத்துவ சமூக பணி**

தந்தை கௌசானல் தூத்துக்குடிக்கு வரும் வரை அந்த இடத்தில் இருந்த தூய சேவியர் உயர்நிலைப் பள்ளியில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கல்வி பயில்வதற்கு வாய்ப்பு கொடுக்கப்படவில்லை எதிர்ப்பின் மத்தியில் அந்த இடத்தில் தாழ்த்தப்பட்ட மக்களும் கல்வி பயில்வதற்கு வாய்ப்பை உருவாக்கிக் கொடுத்தார்.

**பஞ்ச நிவாரணம் எனும் உணவு வழங்கும் பணி**

1892 இல் தற்போதைய திருநெல்வேலி தென்காசி தூத்துக்குடி மாவட்டங்களில் கடும் பஞ்சம் தோன்றியது அந்த பஞ்சகாலத்தில் ஏழை எளிய மக்களுக்கு மத பாகுபாடு இன்றி உணவு தானியங்களை அதிக விலைக்கு வாங்கி இலவசமாக ஏழை மக்களுக்கு கொடுப்பதும் ஏழை மக்களுக்கு கஞ்சி வழங்குவதற்கு ஒவ்வொரு ஊரிலும் மூவரை நியமிப்பது என பஞ்ச நிவாரண பணியை கௌசானல் அடிகள் அவர்கள் சிறப்பாக செய்தார்கள்.

**பாளையங்கோட்டையில் தந்தை கௌசானல் அவர்களின் சமூக பணி**

1892 முதல்1905 வரை பாளையங்கோட்டை மறைமாவட்ட இயேசு சபை தலைமை குருவாக பொறுப்பேற்று சமூக முன்னேற்ற நற்பணிகளை சிறப்புற செய்தார்.

**கழுகுமலையில் சமூக விடுதலைப் பணி**

1893 இல் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு சமணர்கள் கழுவேற்றம் செய்யப்பட்ட இடம் என குறிக்கப்படுகிற கழுகுமலையில் 200 பிற்பட்ட நாடார் இனத்தவர் கத்தோலிக்க சபையில் சேர்ந்தார்கள். கழுகுமலை நாதர் கோவில் தேரோடும் வீதியில் கத்தோலிக்க கிறிஸ்தவருக்கான ஆலயம் கட்டப்பட்டது. அந்த கிறிஸ்தவ தேவாலயத்தின் முன்பு சிறிய பந்தல் ஒன்று போடப்பட்டிருந்தது. அந்தப் பந்தல் போக்குவரத்துக்கோ ஊர்வலங்களுக்கோ எந்த இடைஞ்சலும் இல்லாத நிலையிலேயே இருந்தது ஆனால் 1893 பங்குனி உத்திரம் நாளான ஏப்ரல் 7ஆம் நாள் அவ்வழியாக தேர் ஊர்வலம் வந்தது. காவல் துறையினர் பாதுகாப்பு பணியை செய்து வந்தனர். அந்த நாள் ஞாயிற்றுக்கிழமை ஆக இருந்தது. தேவாலயத்திற்கு முன்பு போடப்பட்ட பந்தலை தேர் இடித்துச் சென்றது தெரு 50 அடி அகலம் உள்ளதாக இருந்தபோதும் சிறிய அளவில் போடப்பட்ட தேவாலய பந்தல் தடையாக இருந்தது எனக்கூறி பிற மதத்தினர் கல் வீசினர் பெரும் கலவரமாக மாறியது. பிற்பட்ட நாடார் வகுப்பினர் கிறிஸ்தவர்களாக மாறியதைக்கண்டு வெகுண்டெழுந்த பிற வகுப்பினர் அவர்களை கொல்லுவோம். தேவாலயத்தை கொளுத்துவோம் என பேரிரைச்சல் கொண்டவர்களாக தேவாலயத்தின் முன் திரண்டு வந்து கிறிஸ்தவ பெண்கள் அணிந்திருந்த நகைகளை எல்லாம் அறுத்து எடுத்ததோடு மட்டுமல்லாமல் வீடுகளை கொள்ளையடித்தனர் நான்கு பேர்

அடித்துக் கொல்லப்பட்டனர். ஒருவர் ஓடும்போது ஈட்டியால் கொல்லப்பட்டார். பத்து வயது கத்தோலிக்க சிறுவன் எண்ணெய் ஊற்றி தீ வைத்து கொளுத்தப்பட்டான். பதினோரு பேர் எங்கு சென்றார்கள் என்று தெரியவில்லை. 60,000 ரூபாய் மதிப்புக்கு பேரிழப்பு அக்காலத்தில் ஏற்பட்டிருந்தது தற்காலத்தில் அது பல கோடி பெறுமானம் மிக்க இழப்பாகும். இந்த அவல நிலையில் கஷ்டப்பட்ட கிறிஸ்தவர்கள் தந்தை அவர்களுக்கு தந்தி அடித்தனர்.

கழுகுமலை கிறிஸ்தவர்களின் வீடுகள் இடிக்கப்பட்டன, எரிக்கப்பட்டன, அனைத்து வீடுகளிலும் மரண ஓலங்கள் புலம்பல்கள். நகைகளை இழந்தார்கள். பொருட்களை இழந்தார்கள். தந்தி கிடைத்ததும் அங்கு உடனடியாக வந்த கௌசானல் அவர்கள் சிறப்பாக செயலாற்றினார்கள். பாதிக்கப்பட்ட அனைவருக்கும் உணவு வழங்குவதற்கான ஏற்பாடுகளை செய்தார்கள். பாதிக்கப்பட்ட மக்களை பாளையங்கோட்டையில் உள்ள வியாகுல மாதா கன்னியர் மடத்திற்கு அனுப்பி வைத்தார்கள் அங்கு அவர்களுக்கு தங்க இடமும் உண்ண உணவும் வழங்கப்பட்டது. சிறந்த வழக்கறிஞர்கள் மூவரை தெரிந்துகொண்டு கழுகுமலை கிறிஸ்தவர்களுக்காக நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார்கள்.

கீழ் நீதிமன்றத்தில் பாதிக்கப்பட்ட கிறிஸ்தவர்களுக்கே தண்டனை வழங்கப்பட்டது. 2 கிறிஸ்தவருக்கு மரண தண்டனை, 23 கிறிஸ்தவருக்கு ஆறுமாத கடுங்காவல், 11 கிறிஸ்தவருக்கு 4 மாத சிறைவாசம், கீழ்நீதிமன்றத்தின் தீர்ப்பை கண்டு அதிர்ச்சி அடைந்த கௌசானல் அடிகளார் சென்னை உயர்நீதிமன்றத்திற்கு இந்த வழக்கை எடுத்துச் சொல்லும்படி அதற்கான முயற்சிகளை மேற்கொண்டு இது குறித்த செய்திகளை இந்தியாவில் தலைசிறந்த நாளிதழ்களுக்கும் அனுப்பிவைத்தார். கழுகுமலை மக்களுக்கு நீதி கிடைக்க முயற்சிகளை மேற்கொள்ளலானார்.

இங்கிலாந்தில் இருந்த கர்தினால் அவர்களுக்கு முழு விளக்கமாக கழுகுமலை சம்பவம் குறித்து கடிதம் எழுதி இந்திய செயலராகப் பணியாற்றிய ஹாமில்டன் பிரபுவிற்கு இதுகுறித்து உதவி செய்யும்படி கேட்டிருந்தார். ஹமில்டன் பிரபுவும் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்கு கழுகுமலை சம்பவத்தில் கீழ் நீதிமன்றம் அளித்த தீர்ப்பை உயர் நீதிமன்றம் மறுபரிசீலனை செய்ய வேண்டும் என தந்தி அடித்தார்.இந்திய செயலாளரிடம் இருந்து உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்கு இவ்வாறு தந்தி வருவது இதுவே முதல் முறை.

சென்னை உயர்நீதிமன்றத்தில் கழுகுமலை கிறிஸ்தவர்கள் சார்பாக வெட்டர்பன் என்ற சிறந்த வழக்கறிஞர் வாதாடும் படி கௌசானல் ஏற்பாடு செய்திருந்தார். டிசம்பர் 3ஆம் நாள் மாலை 4 மணி அளவில் அடிகளாருக்கு தந்தி ஒன்று வந்தது அதில் கிடைத்த செய்தி கழுகுமலை சம்பவத்தில் தண்டனை பெற்ற அனைத்து கிறிஸ்தவர்களும் விடுதலை பெற்றார்கள் என்பதாகும். கழுகுமலை கிறிஸ்தவர்களுக்கு தேவாலயம் கட்ட இடம் ஒதுக்கி தரும்படி முயற்சிகளை மேற்கொண்டார். முதலில் ஊருக்கு ஒதுக்குப்புறமான இடம் கிறிஸ்தவர்களுக்கு காட்டப்பட்டது அதை கிறிஸ்தவர்களும் தந்தை அவர்களும் புறக்கணித்து விட்டார்கள். பின்னர் நல்லதொரு இடத்திற்காக முயற்சி மேற்கொண்டு கிறிஸ்தவர்கள் கேட்ட நல்லதொரு இடம் கழுகுமலையில் அவர்களுக்கு கொடுக்கப்பட்டது.

### பாபநாசம் கட்டளை மலையில் தந்தை அவர்களின் சமூக பணி

1892 ஆம் ஆண்டு 6 ஆயிரம் ரூபாய் விலைக்கு பாபநாசம் அணை பகுதியில் இருந்த கட்டளை மலை என்னும் இடம் தந்தை வெர்டியர் அவர்களால் வாங்கப்பட்டது. 1894 ஆம் ஆண்டு இயேசு சபையின் மதுரை மாநில தென் பகுதிக்கு அது விற்கப்பட்டது. தென் பகுதியின் தலைமை குருவாக இருந்த தந்தை கௌசானல் அடிகளார் கட்டளை மலையில் பண்ணை அமைத்து பயிரிடும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஏழை எளியவர்களுக்கு அங்கு பணி கொடுத்து அவர்களுக்கு உதவி செய்தார்.

### இருதயகுளம் தோற்றமும் சமூகப் பணியும்

தந்தை கௌசானல் அடிகளார் விக்கிரமசிங்கபுரம் அருகில் இருந்த உச்சங்குளம் என்ற கிராமத்தில் பெரிதானதோர் நிலத்தை வாங்கினார். அதற்கு இருதயகுளம் என பெயரிட்டார். அங்கு தம்முடைய இறை பணியையும் சமூகப் பணியையும் தொடங்கினார். கட்டளை மலை பண்ணையில் இப்பகுதி மக்களுக்கு வேலை வாய்ப்பு வழங்கினார்.

### வடக்கன் குளத்தில் தந்தை கௌசானல் அடிகளாரின் சமூக பணி

வடக்கன்குளம் உருவான காலமான 1679 முதல் பிற்பட்ட நாடார் வகுப்பினர் அங்கு வசித்து வந்தனர், பின்னர் உயர் வகுப்பு வேளாளர்கள் அங்கு குடியேறினர், தேவாலயம் கட்டப்பட்டது. இரு தரப்பினரும் தனித்தனியே அமர்ந்து ஆராதனை செய்யும்படியாக அதில் அமைப்பு உருவாக்கப்பட்டது. இந்த அமைப்புமுறை பங்குதந்தை ஆக இருந்த தந்தை கவுசானல் அவர்களுக்கு மிகுந்த மன வேதனையை கொடுத்தது. வடக்கன்குளம் திருக்குடும்ப தேவாலயத்தின் ஒரு மண்டபத்தில் வேளாளரும் அடுத்த மண்டபத்தில் நாடாரும் இறை வழிபாட்டிற்காக சென்றார்கள். இந்த சாதி வேறுபாட்டை மாற்றவேண்டும் என்று எண்ணங் கொண்ட தந்தை கவுசானல் அடிகளார் இரு தரப்பினருக்கும் இடையில் தடையாக இருந்த சுவரை அகற்ற எண்ணினார். பீட பணிகளில் உதவி செய்யும் உரிமை வேளாள சிறுவர்களுக்கு இருந்தது. நாடார் சிறுவர்களுக்கு இல்லை, கிராதிக்குள் நுழையக்கூடிய உரிமை வேளாளர்களுக்கு இருந்தது நாடார்களுக்கு இல்லை. வழிபாடு செய்யும் இடம் அங்கு இருந்த 1000 வேளாளருக்கு போதுமானதாக இருந்தது. ஆனால் 4000 நாடார்களுக்கு போதுமானதாக இல்லை. வேளாளர்களும் நாடார்களும் இணைந்து வழிபாடு செய்வதற்கு தடையாக இருந்த பிரிவினைசுவரை ஒரே நாள் இரவில் இடித்து அப்புறப்படுத்த தந்தை கௌசானல் உத்தரவிட்டார். அவரது உத்தரவுபடி அன்றே சுவர் இடித்து அப்புறப்படுத்தப்பட்டது. பிரிவினை சுவரை மீண்டும் எழுப்பக் கூடாது என்பதில் உறுதித்தன்மையை தந்தை கௌசானல் காட்டினார்.

### மரணமும் நல்லடக்கமும்

சுகவீனம் ஆனபின் 1929 இல் பாளையங்கோட்டையில் தங்கி ஓய்வெடுத்து வந்தார். அதிக சுகவீனம் அடைந்த தந்தை கௌசானல் அவர்கள் 25.01.1930 சனிக்கிழமை அன்று பிற்பகல் 3:45 மணியளவில் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். அவரது திருவுடல் 26 .01.1930 அன்று பாளையங்கோட்டையில் நல்லடக்கம் செய்யப்பட்டது, அடக்க ஊர்வலத்தில் பல்லாயிரக்கணக்கான மக்கள் பங்கு பெற்றது குறிப்பிடத்தக்கது.

J.ஜான் ஞானராஜ் , கல்லிடைகுறிச்சி

# வரலாற்று செய்தி



தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் வரலாறு படைத்துத்துக்கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் நம் சங்கத்தின் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத இதழ். நம்முடைய இதழை லண்டனில் வாழும் உலக தமிழ் சங்கத்தின்(UK) நிறுவனர் மற்றும் தலைவர், அன்பு அண்ணன் திரு ஜேக்கப் ரவிபாலன் அவர்களிடம் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத ஆய்விதழை கொடுத்து அறிமுகப்படுத்திய பொழுது...

---

# நன்றி

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டம் சிறப்பாக செயல் படுத்தி வருவது அனைவரும் தெரிந்ததே அதில் ஒரு செயல் திட்டம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் பெயரிலேயே நினைவு புத்தக அங்காடி ஏற்படுத்தப்பட்டுள்ளது. புத்தகங்களை டிஜிட்டல் முறையில் கொண்டு வருவதற்கு நம்முடைய நெடுநாள் தேவையான புத்தகம் ஸ்கேன் மிஷின், மற்றும் பல தேவைகளை கேட்டு இருந்தோம். வரலாற்று சங்கத்தின் தேவையை கருத்தில் கொண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயா அவர்கள் குடுபத்தின் சார்பாக திரு. பால்ஜெயசிங், மகன் மற்றும் மறுமகன் அவர்கள் குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் முயற்சியினால் Fujitsu SV600 Over Head Scanner மிஷின் வரலாற்று சங்கத்திற்கு அன்பளிப்பு செய்தார்கள். மற்றும் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயா அவர்களுடைய புத்தகங்களை மறுபதிப்பு செய்யவும், புத்தகங்களை மொழி பெயர்ப்பு செய்து வெளியிடும் பணியும் ஐயா குடுபத்தின் உதவியினால் நடந்து வருகின்றது.

தொடர்ந்து நாங்கள் இன்னும் சிறப்பாக செயல்படவும், பல புதிய திட்டங்களை கொண்டு வரவும், இதில் எங்களுக்கு உதவியாக இருக்கும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயா அவர்களுடைய குடும்பத்திற்கும் வரலாற்று சங்கத்திற்காக ஜெபித்து, மற்றும் கொடுத்து இருக்கின்ற அனைத்து உள்ளங்களுக்கு



வரலாற்று சங்கத்தின் குடுப்பத்தின் சார்பாக நன்றியை நாங்கள் தெரிவித்துக்கொள்கின்றோம்.

---



கிறிஸ்தவ **வரலாற்றுச் சுவடுகள்** மாத ஆய்விதழ் சந்தா விபரம்

**உங்களுடைய முகவரி மற்றும் மின்னஞ்சல் முகவரியுடன் தொடர்பு எண்களையும் இணைத்து கொடுக்கப்பட்டுள்ள மின்னஞ்சல் அல்லது வாட்ஸ் ஆப் எண்ணிற்கு அனுப்ப அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உங்களுக்கு புத்தகங்கள் அனுப்பி வைக்கப்படும்.**

**சந்தாவை எங்கள் வங்கி கணக்கில் செலுத்த**

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| ஆண்டு சந்தா | 600 + நன்கொடை |
| ஐந்து வருட சந்தா | 3000 + நன்கொடை |
| தனிப்பிரதி | 60 + நன்கொடை |

G Pay

**Bank :- Federal Bank**
**Name :- Tinnevelly Christian Historical Society**
**Account number :- 17480200003684**
**IFSC Code :- FDRL0001748**

# வச்சிரமணி கிறிஸ்தியான் வழிவந்த செந்தமிழ் புலவர் மூவர்
## சங்கை . சி. தேவதாஸ் ஞானமணி

பேராசிரியர் . ந . ஜான் ஜயானந்தம்,
சென்னை

கடந்த பதிவின் தொடர்ச்சி...

அன்பே பிரதானம்' கீர்த்தனைப் புகழ் சங்கை C.P. ஞானமணி அவர்களின் தலைமகனாக தேவதா ஞானமணி அவர்கள் 1890 - ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 14-ஆம் நாள் பிறந்தார்.

தம் தந்தையைப் போன்றே இவரும் தமிழ்ப் புலமையும், கவிபாடும் திறமையும், அழகாகப் பாடும் வரமும் பெற்றிருந்தார். தம் தந்தைக்கு ஒப்பாகவே தேவ அழைப்புடன் இங்கிலாந்துத் திருச்சபையைச் சார்ந்த எ .பி . ஜி. மிஷனில் குருப்பட்டம் பெற்று, இறை பணியாற்றி வந்தார். தமக்குத் திருமணமான பின்னர், இளம் வயதிலேயே திருப்பணி அழைப்பை ஏற்று, 1923-ஆம் ஆண்டு தாம் பிறந்து வாழ்ந்த தமிழ் மண்ணை விட்டுச் சிங்கப்பூர், மலேயா (இப்பொழுது மலேசியா) சென்று, தம் வாழ்க்கை முழுவதையும் இறை பணியில் ஈடுபடுத்தி மிகக் கடுமையாக உழைத்தார். அவர் தம் வாழ்வில் பல இன்னல்களையும், இடர்பாடுகளையும் எதிர்கொள்ள வேண்டியிருந்தும், தாம் நேசித்த ஆண்டவருக்காகத் தம்மை முற்றுமாக ஒப்படைத்து, துன்பம் பொறுத்து கடுமையாக உழைத்தார்.

அவருக்கு 1919-இல் திருமணம் ஆயிற்று. அன்னாருக்கு இரண்டு பெண் மக்கள் மட்டுமே பிறந்தனர். மூத்த மகள் ஸ்டெல்லா இளையவள் செலினா. ஸ்டெல்லாவிற்கு நான்கு பிள்ளைகள் உள்ளனர். அவர்கள் இன்று மொரேசிய , நார்வே, கலிபோர்னியா போன்ற நாடுகளில் வாழ்கிறார்கள். இளைய மகள் செலினாவிற்குப் பிள்ளைகள் இல்லை. இவர் கோலாலம்பூரில் வாழ்ந்து, தம் 78-ஆம் வயதில் ஜனவரி 26, 2004-இல் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள்.

இரண்டாம் உலகப்போரின் ஆண்டுகளில் ஞானமணி அவர்கள் தம் குடும்பத்தாருடன் பலவித இன்னல்களைச் சந்திக்க நேர்ந்தது. பணக்குறைவு, உணவுப்பொருட்கள் கிடையாமை, யுத்தகாலக் கொடுமைகள் ஆகிய பலவற்றையும் சந்திக்க வேண்டியதாயினும், மனம் தளராது தம் இறை பணியை ஆற்றி வந்தார். இவ்வாறு முப்பது ஆண்டுகள் அயராது ஆண்டவருக்காக உழைத்து வந்த இவருக்கு 1953-இல் அடிவயிற்றில் கடுமையான வலி உண்டாயிற்று. இதன் காரணமாக பினாங்கில் உள்ள மருத்துவமனையில் உடனடியாகச் சேர்க்கப்பட்டு அவருக்கு அறுவை சிகிச்சை அளிக்கப்பட்டது. ஆயினும் சிகிச்சை பயனற்று 24 மணிக்குப் பின்னர் அவரது ஆவி பிரிந்தது. இவ்வாறு தாம் உண்மையுடன் சேவித்த ஆண்டவர் சன்னிதியடைந்தார்.

**கனோன் பட்டம் பெறுதல்**

அவர் மரிப்பதற்குச் சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் இங்கிலாந்து திருச்சபையார், அவருக்குக் கனோன் (Canon) பட்டம் வழங்கினர். இது அவருடைய உண்மைக்கும், உழைப்புக்கும் இவ்வுலகில் பெற்றுக் கொண்ட ஒரு வெகுமதியாகும். கர்த்தருடைய தாசனாக இருந்த அவருக்குப் பரலோகில் ஜீவகிரீடம் கிடைக்கும் என்பது உறுதி.

சிறந்த மிஷனெரி பாதிரியான சங்கை சி.டி. ஞானமணி அவர்கள், தம் இறுதி நாள் வரை பல இன்னல்களுக்கிடையில் உத்தமமாகப் பணியாற்றி வந்தார். தமக்கென்றும், குடும்பத்தாருக்கென்றும், வசதியையும், பொருளையும் தேடிக்கொள்ளாது, நாடு காடுகளிலும், மூலை முடுக்குகளிலும் சென்று மேய்ப்பனற்ற மக்களை நாடித்தேடி, அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்த



வசதியற்ற இடங்களுக்கே சென்று ஆன்மீகப் போதனை செய்து அயராது உழைத்தார். தேவதா என்ற தம் பெயருக்கேற்றபடியே மெய்யான தேவதாசனாக, தம் வாழ்க்கையைக் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு அர்ப்பணித்தவராயிருந்தார். சங்கை சி. தேவதாஸ் ஞானமணி

**சாதனையில் வல்லவர் (1890-1953)**

இறை ஊழியத்தைச் சார்ந்த பல சமூகப் பணிகளையும் நமது ஐயரவர்கள் பெருமுயற்சியுடன் நிறைவேற்றியது, அவருடைய இறை ஊழிய வெற்றிக்குக் காரணமாயிருந்தது. சிங்கப்பூரில் தூய பேதுரு ஆலயம் நின்ற இடத்தை அபிவிருத்திப் பணிக்கென அவ்வரசாங்கம் கையகப்படுத்திக் கொண்டபோது, இவ்வரசாங்க அதிகாரிகளுடன் இடைப்பட்டு, இரண்டு ஆலயங்கள் சீன ஆலயமும், தமிழ் ஆலயமும் கட்டுவதற்கான நிலத்தை வாங்குவதற்கு போதுமான ஈட்டுத் தொகையை அவர் பெற்றார்.

யுத்த நாட்களில் மலாக்காவில் இருந்த ஆலயக் கட்டடத்தை ஜப்பானிய அதிகாரிகள் போர்ப் பண்டசாலையாக மாற்றினபோது, அன்னாரின் மேற்கூறிய திறமை மீண்டும் வெளிப்பட்டது. ஜப்பானிய அதிகாரிகளிடமும் அவர் துணிவுடன் வாதாடி, ஆலயத்தை மீட்டு ஆராதனைக்கென்றே பயன்படுத்தியது, இவர் எத்தகைய மக்களிடமும் இடைப்பட்டுக் காரியத்தைச் சாதிக்கும் திறமையுடையவர் என்பதைப் புலப்படுத்தும்.

**சங்கை சி.டி. ஞானமணியவர்களின் நற்குணப் பண்புகள்**

நமது ஞானமணியவர்களின் இளைய மகள் செலினா அவர்களின் உதவியுடன் பல விவரங்கள் கிடைக்கப் பெற்றோம். சங்கை சி.டி. ஞானமணியவர்கள் ஒரு கடின உழைப்பாளி. பல இடர்பாடுகளுக்கும் தடைகளுக்கிடையிலும் தம் ஊழியத்தைத் தயங்காது, தளராது, சிறப்பாக நிறைவேற்றி வந்தார். மற்றும் அவர் ஆத்தும தாகமுடையோராக இரப்பர்த் தோட்டங்களிலும், யுத்த முகாம்களிலும் மக்கள் குடியேறியிருந்த தூரமான இடங்களுக்கும் கடமை உணர்வோடு ஒழுங்காகச் சென்று ஆராதனை நடத்தி, போதனை கொடுத்து வந்தார். மலையாள மக்களையும் அவர் விட்டுவிடவில்லை. சீன மக்களின் நலனை நாடி அவர்களுக்கும் ஓர் ஆலயம் கட்டுவதற்கான இடத்தைப் பெற்றுக் கொடுத்தார்.

அவர் ஜெமா என்ற இடத்திலிருந்தபோது தூரத்தில் இருந்த சிற்றூர்களையும் சந்திக்க வேண்டும் என்ற முயற்சியுடன், இரயிலில் பயணம் சென்றபோது, தம் சைக்கிளையும் கூடவே எடுத்துச் சென்று, பின்பு அதில் நீண்ட தூர பயணம் செய்து மக்களைச் சந்தித்தது அவருடைய கடின உழைப்பைக் காட்டுகிறது.

கொடிய யுத்த நாட்களாகிய அக்காலத்தில் பணம், உணவு முதலிய வசதிகள் சற்றேனும் இன்றி பஞ்சம் நிலவிய போதிலும், மலேரியா முதலிய வியாதிகள் பரவியிருந்த இடங்களுக்கும், தொலைதூரத்தில் அமைந்திருந்த இராணுவ முகாம், இரப்பர் தோட்டங்கள் போன்ற இடங்களுக்கும் முயற்சியுடன் சென்று தம் ஊழியத்தைத் தொடர்ந்தது எத்தனை மேன்மை! நான்கு ஆண்டுகள் ஒரு சிறு கூரை வீட்டில் குடும்பமாகத் தங்கியிருந்தது, அவர் தம் ஊழியத்தை விடாமுயற்சியுடன் துன்பங்களைப் பொறுத்து, உண்மையுடன் நிறைவேற்றி வந்தார் என்பதையும் அவரது சுயநலம் கருதாத் தியாக மனப்பான்மையையும் எடுத்துக்காட்டுகிறது. போதுமான வருவாய் இன்றி அவரும் அவர் குடும்பமும் அதிக அவதியடைந்துள்ளனர். அவர் 1942ஆம் ஆண்டு மே திங்கள் 1-ஆம் தேதி சிங்கப்பூரிலிருந்த இங்கிலாந்துத் திருச்சபையின் பேராயருக்கு எழுதிய ஒரு கடிதம் இதைத் தெளிவுபடுத்துகிறது. யுத்த நாட்களில் அவர்கள் அடைந்த துயரங்களை இக்கடிதம் விவரமாக எடுத்துரைக்கிறது.

**சங்கை சி.டி. ஞானமணி ஆற்றிய இறைபணி**

இவருடைய தகப்பனார் சென்னை வேப்பேரியில் அமைந்துள்ள தூய பவுல் ஆலயத்தில் பணியாற்றிய வேளையில் இவர் குருப்பட்டம் பெற்றார். பின்னர் அவர் தந்தையார் பணியாற்றிய அந்த ஆலயத்திலேயே தம் முதல் பிரசங்கத்தை நிகழ்த்தினார். இதைக் குறித்து ஒரு சுவையான செய்தி உண்டு. அன்று நிகழ்த்திய தமது முதல் பிரசங்கத்திற்கு அவர் எடுத்துக் கொண்ட பிரசங்க வாக்கியம், 'விதைக்கிறவன் ஒருவன் விதையை விதைக்கப் புறப்பட்டான்' (மாற்கு 4:3) என்பதாம். இப்பிரசங்க வாக்கியத்தை அவர் வாசித்த உடனே, ஆலயத்தில் அமர்ந்திருந்த அவர் தகப்பனார் சி.பி. ஞானமணி அவர்கள், இவ்வாக்கியம் ஆழமான சாத்தியங் கொண்ட வாக்கியமாயிற்றே. இவ்வாக்கியத்தை மையமாகக் கொண்டு, மகன் எவ்வாறு தன் பிரசாங்கச் செய்தியை நிறைவு செய்யப்போகிறானோவெனக் கலக்கமுற்று, ஜெபித்துக் கொண்டேயிருந்தாராம். இருப்பினும் மகன், நல்ல பல ஆதாரக் குறிப்புகளுடன் அருமையான போதனையுடன் கூடிய அப்பிரசங்கத்தை, குறிப்பிட்ட நேரத்தில் அழகுற முடித்தாராம். ஆராதனை முடிந்த பின்பு தம் நேசமகன் ஆற்றிய அருமையான பிரசங்கத்தை மெச்சிய நிலையில் மகனைக் கண்ணீருடன் அணைத்துத் தழுவி முத்தமிட்டு வாழ்த்தினாராம்!

சங்கை சி.டி. ஞானமணி அவர்கள் 1922-ஆம் ஆண்டு தம் தகப்பனார் பணியாற்றிய திருச்சி சகல பரிசுத்தவான்கள் ஆலயத்தில் அவருடைய மறைவிற்குப் பிறகு சுமார் ஓர் ஆண்டு குருவாகப் பணியாற்றினார். சிங்கப்பூர் மலேயா ஊழியங்கள் இதன் பின்னர் இவர் இங்கிலாந்துத் திருச்சபையின் சிங்கப்பூர் ஆதீனத்தின் கீழ் இருந்த கோலாலாம்பூர் நகரில் உள்ள தூய மரியாள் ஆலயத்தில் தமிழ்ப் போதகராக நியமிக்கப்பட்டார். அவ்வாலயம் மலேசியாவில் (அந்நாட்களில் அந்நாடு மலேயா' என்று அறியப்பட்டிருந்தது). மிகவும் தொன்மை வாய்ந்த ஆலயமாகும். அவ்வாலயத்தின் இறை மக்களுக்கு அவர் பத்து ஆண்டுகள் இறைபணியாற்றினார். அந்நாட்களில் அப்பெரும் பட்டணத்தைச் சுற்றிலும் வாழ்ந்து கொண்டிருந்த தமிழ்க் கிறிஸ்தவர்களுக்கென்று இரண்டு, மூன்று சிறு சபைகளையும் நிறுவினார். பின்னும் வார நாட்களில் அங்குள்ள இரப்பர் தோட்டங்களில் வேலை செய்து கொண்டிருந்த தமிழர்களின் குடும்பங்களையும் சந்தித்து, அவர்கள் மத்தியிலும் உழைத்து வந்தார்.

பத்து ஆண்டுகளுக்குப் பின்னர், 1932-இல் இவர் சிங்கப்பூரில் உள்ள தூய பேதுரு ஆலயத்திற்கு மாற்றப்பட்டார். அவ்வாலயத்தின் முழுப்பொறுப்புகளுடன், வார நாட்களில் அங்குள்ள தூய அந்திரேயா பேராலயத்திலும் ஆங்கில ஆராதனை நடத்தி வந்தார். அங்கிருந்த கடற்படை முகாமில் தங்கியிருந்த தமிழ் மக்களையும் ஒழுங்காகச் சந்தித்து, அவர்களிடையிலும் அவர் உழைத்து வந்தார்.

அந்நாட்களில் தென் இந்தியாவிலுள்ள கேரளாவிலிருந்து குடிபெயர்ந்து வந்திருந்த அநேக மலையாளக் குடும்பங்கள்

சிங்கப்பூரில் வாழ்ந்து கொண்டிருந்தன. அவர்களுடைய குடும்பங்களில் இருந்த பெண்கள் குறிப்பாகத் தமிழையோ, ஆங்கிலத்தையோ புரிந்து கொள்ளக் கூடாதவர்களாக இருக்கிறதை சிங்கப்பூர் டார்செட் சாலையில் அமைந்துள்ள கிறிஸ்துநாதர் ஆலயம், இதன் கட்டுமானப் பணியை கண்ட அவர், ஓர் ஆசிரியரின் உதவியுடன் மலையாள மொழியை முறையாகச் சி.டி. ஞானமணி அவர்கள் 1938-ஆம் ஆண்டில் கற்று, மலையாள மொழியிலும் ஆராதனைகள் நடத்த ஆரம்பித்தார்.

**சிங்கப்பூரிலும் திட்டமிட்டார்.**

சிரியன் கிறிஸ்தவத் திருச்சபை உருவாகிறதற்கு இதுவே அடித்தளமாக அமைந்திருந்தது. அவர் ஆற்றிய இவ்வூழியத்தின் விளைவாகவே 1938-ஆம் ஆண்டு அவர் சிங்கப்பூரை விட்டுச் செல்லும் முன்னரே, கேரளாவிலிருந்து சிரியன் திருச்சபையின் முதல் குரு அங்கு நியமிக்கப்படக் காரணமாயிற்று.

அந்நாட்களில் சிங்கப்பூரில் இருந்த தூய, பேதுரு ஆலயம் இருந்த இடத்தைச் சிங்கப்பூர் அரசாங்கம் அப்பட்டணத்தின் அபிவிருத்திப் பணிக்கெனக் கையகப்படுத்தியது. எனினும் சி.டி. ஞானமணி அவர்கள், மனம் தளராது அரசாங்க அதிகாரிகளுடன் தொடர்பு கொண்டு, பல முயற்சிகளுக்குப் பின்னர், அந்நிலத்தில் மதிப்புக்கேற்ற போதிய பணத்தை ஈட்டுத் தொகையாகப் பெற்றார். இப்பணத்தைக் கொண்டு சீன மக்களுக்கும், தமிழ் மக்களுக்கும் என இரு தனி ஆலயங்கள் கட்டுவதற்கான இரு இடங்கள் வாங்கப்பட்டன. அவ்வாறு அன்று வாங்கிய 58,000 சதுர அடி பரப்புள்ள இடத்தில் கட்டப்பட்ட சிங்கப்பூரின் டார்செட் சாலையில் தற்சமயம் அமைந்துள்ள தமிழ்க் கிறிஸ்தவர்களுக்கான ‘கிறிஸ்து நாதர் ஆலயம் இன்றும் அவரது பெயரைப் பறைசாற்றிக் கம்பீரமாக நிற்கிறது.

இவ்வாலயம் கட்டப்படுவதற்கு, சங்கை, ஞானமணி அவர்கள் பெரும் முயற்சிகள் மேற்கொண்டார். எழுப்பப்படும் ஆலயம், கட்டடக்கலையில் மிகச் சிறப்புற்றிருக்க வேண்டும் எனத் திட்டமிட்டு, அதற்கான கட்டடக் கலை வல்லுநர்களிடம் கலந்தாலோசித்து அழகிய, சிறப்பான ஆலயத்திற்கான ஒரு நல்ல வரைபடத்தை உருவாக்கிக் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொண்டார். அது இந்திய கட்டடக்கலை நுணுக்கங்களுடன் அமைய வேண்டும் எனவும் திட்டமிட்டார். ஆயினும், தாம் பெரிதும் வாஞ்சித்து முயற்சிகள் மேற்கொண்ட ஆலயக்கட்டடத்தின் அடிக்கல் நாட்டப்படுவதற்கு முன்னரே, 1939இல் மறுபடியும் மலேசியாவில் உள்ள மலாக்கா என்ற இடத்திற்கு அவர் மாற்றப்பட்டார். அங்குள்ள பெயர் பெற்ற கிறிஸ்தவ ஆலயத்தில் அவர் தமிழ்க் குருவாக நியமிக்கப்பட்டார். இரண்டாம் உலக யுத்த நாட்கள் அவர் மலாக்கா மாற்றலாகிச் சென்ற ஓர் ஆண்டுக் காலத்திற்குள் இரண்டாம் உலக யுத்தம் துவங்கிவிட்டது. அச்சமயம் அந்த மலாக்கா ஆலயம் ஜப்பானியர்களால் கைப்பற்றப்பட்டு, போர் ஆயுத பண்டசாலையாக மாற்றப்பட்டது. இது சில ஆண்டுகள் நீடித்தது. யுத்தம் முடியும் சற்று முன்னரே ஞானமணியவர்கள் ஜப்பானிய அதிகாரிகளிடம் இடைப்பட்டு, முயற்சிகள் பல எடுத்து அக்கட்டத்தை மீண்டும் பெற்று, தேவையான சீரமைப்புகள் செய்து, மீண்டும் அதை ஓர் ஆலயமாக மாற்றினார்.

இரண்டாம் உலக மகாயுத்தம் துவங்குவதற்குச் சற்று முன்னர், பல ஜப்பானியர்கள் சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் குடியேறி இருந்தனர். பொதுவாக அவர்கள் வியாபாரம் செய்வோராவர். அவர்கள் சொந்த வீடுகளும் நிலபுலன்களும் உடையவர்களாயிருந்தனர். தாங்கள் குடியிருக்கும் வீட்டுக்கு அருகில் தாங்கள் விளையாடுவதற்கென்று டென்னிஸ் ஆட்ட அரங்கங்களை நல்ல சிமெண்டுத் தரையிட்டு நிர்மாணித்திருந்தனராம். அதில் விளையாடுவதற்கு அவ்வீட்டின் கணவனும் மனைவியும் தவிர வேறு எவரும் இருக்க மாட்டார்கள். ஆயினும் இந்த ஆடுதளம் நல்ல முறையில் அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் நடந்தது யாதெனில் யுத்தம் ஆரம்பித்து ஆங்கிலேயருக்கு எதிராக ஜெர்மனியரும் ஜப்பானியரும் சேர்ந்து கொண்டவுடனே, ஜப்பானியர் அமைத்திருந்த இந்த டென்னிஸ் விளையாட்டு அரங்குகள் எல்லாம் ஒன்றாக இணைக்கப்பட்டு, விமானங்கள் வந்திறங்கும் ஓட்டப்பாதையாக (runway) மாற்றப்பட்டு விட்டன. அத்தகைய நிலையில் கூரிய அறிவுடைய அந்த ஜப்பானியர்கள், ஒரு நேர் கோட்டில் பல டென்னிஸ் அரங்குகள் அமையத்தக்கதாக முன்கூட்டியே திட்டமிட்டு, இவ்வாறு தகுந்த போர் ஆயத்தத்துடன் இருந்தனர் என்பது நம்மை வியக்க வைக்கிறது. இவ்விவரத்தை ஐயரவர்கள் மூலம் யாம் கேட்ட விவரமாகும்.

இதன் பின்னர் அவர் மலேசியாவிலுள்ள ஜெமா என்று அழைக்கப்பட்ட ஒரு பட்டணத்திற்கு மாற்றப்பட்டார். அது இரயில் போக்குவரத்து வசதியுள்ள ஓர் இடம். அங்கிருந்து அவர் நாற்றிசைகளுக்கும் பயணம் செய்ய இது வசதியாக இருந்தது. அப்போர் நாட்களில் போதகர்கள் குறைவாக இருந்த காரணத்தினால், அவர் பல இடங்களுக்குச் சென்று பணியாற்ற வேண்டிய அவசியம் இருந்தது. எனவே, தாம் செல்ல வேண்டிய இடங்களுக்குச் சுலபமாய்ப் போயச் சேரும்படியாகத் தம் சைக்கிளையும் கூடவே இரயிலில் எடுத்துச் சென்று, சைக்கிளில் பயணம் செல்ல வேண்டிய சிறிய ஊர்களை அடைய அதைப் பயன்படுத்தி வந்தார்.

ஜெமா என்ற அந்தப் பட்டணத்தில் இரண்டு அடுக்குள்ள ஒரு கட்டடத்தை வாடகைக்கு எடுத்து, அதன் மாடியை ஒரு சிற்றாலயமாக மாற்றினார். பகாங் என்ற இடத்தின் கடைசி எல்லையாகிய பாகுவா என்ற இடத்தில் அமைந்திருந்த இராணுவ முகாம் வரை சென்று, தமிழ் மக்களைச் சந்தித்து அவர்களுக்கு இறை போதனை கொடுத்து வந்தார். சற்று வெள்ளைத் தோலுடையவர்களாயிருப்பவர்களை ஐரோப்பிய வம்சத்தாராக இருப்பார்கள் எனச் சந்தேகித்த ஜப்பானியர்கள் அப்படிப்பட்ட அனைவரையும் அங்கிருந்த இராணுவ முகாமில் வைத்திருந்தனர். கத்தோலிக்க பிஷப் ஒருவரும் அப்படிப்பட்டவர்களில் ஒருவராக இருந்தார். யுத்தம் நடந்து கொண்டிருந்த அந்நாட்கள், மிகக் கடுமையான பஞ்சநாட்களாக இருந்தன. அச்சமயத்தில் ஜப்பானியருக்கு வேலை செய்பவர்களுக்கு மட்டுமே ரேஷன் கார்டு (குடும்ப அட்டை) வழங்கப்பட்டு, ஏதோ சில உணவுப் பொருட்கள் கிடைத்து வந்தன. மற்றவர்கள் பெரும் பாடுகளுக்குட்பட வேண்டியிருந்தது. இத்தகைய சூழ்நிலையிலும், உணவு வசதியற்று, மலேரியா போன்ற கொடும் வியாதிகள் பரவியிருந்த அவ்விடங்களுக்கும் ஞானமணியவர்கள் மனம் தளராது சென்று முயற்சித்து, இயன்றவரை இறைபணியாற்றினார்.

**யுத்த நாட்களுக்குப் பின்னர்**

இக்கொடியயுத்தக்காலம் முடிந்த பின்னர், அவர் பினாங்கில் உள்ள தூய. ஜார்ஜ் ஆலயத்திற்குக் குருவாக நியமிக்கப்பட்டார்.

அந்த ஆலயத்தின் குருவானவர் தங்கியிருந்த வீடு குண்டு வீழ்ந்து யுத்தத்தில் அழிந்துவிட்டபடியால், தாம் குடியிருப்பதற்கு அவர் வேறொரு இடம் தேட வேண்டியதாயிற்று. தம்முடைய இனத்தாராகிய திரு. ஜீ.சந்தோஷம் என்பார் அந்நாட்களில் அப்பட்டிணத்திற்கு அருகே ப்ரேய்' என்ற ஒரு சிற்றூரில் ஏழைப் பிள்ளைகளுக்கென்று ஒரு பள்ளியை நடத்தி வந்தார். அப்பள்ளியில், பலகைகளால் கட்டப்பட்ட ஒரு சமையல் அறை இருந்தது. அது யுத்த நாட்களில் மர ஊன்றுக்கால்களின் மேல் ஜப்பானியர்களால் கட்டப்பட்டதாகும். அந்த வசதி குறைவான சிறிய அறையிலே ஐயரவர்கள் தம் குடும்பத்துடன் நான்கு ஆண்டுகள் தங்கினார். அந்நாட்களில் ஞாயிற்றுக் கிழமைகளில் குடும்பத்துடன் ஆலயத்திற்குப் பயணம் செய்வதற்குப் போதுமான பணவசதி அவர்களுக்கில்லாதிருந்தது. அச்சமயத்தில் ஆண்டவரின் கிருபையினால் அவருக்கு ஒரு மோட்டார் சைக்கிள் கொடுக்கப்பட்டது. அதன் உதவியோடு அவர் வட மலேயா, கேடா, வெல்லெஸி மாகாணம் முதலிய பகுதிகளில் கிறிஸ்தவர்கள் வாழ்ந்த இடங்களில் எல்லாம் சென்று ஆராதனை நடத்தியும் போதனை கொடுத்தும் உழைத்துள்ளார்.

இவர் பல கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். அவற்றுள், 1. பெத்தலேகம் ஊரோம், 2. ஆத்துமா கர்த்தரை, 3. பண்டிகை கொண்டாடு, 4. எந்நாளும் துதித்திடுவீர் இப்பாடல்கள் மட்டுமே இன்றைய கீர்த்தனை புத்தகத்தில் இடம் பெற்றுள்ளன.

தொடரும்...

# சாஸ்திரியாரின் படைப்பில் தந்தை சுவார்ட்ஸ்

சங்கை. நோவா சாஸ்திரியார்,
தஞ்சாவூர்.

'சங்கீதத்தை முதற் கொடுத்தான் வேத
சாஸ்திரத்தையுந் தான் கொடுத்தான்
சங்கீதத்திலும் சாஸ்திரத்திலும்
சமர்த்தன் ஆக்கினான் ஞானப் பெண்ணே.'
---- வே.சா., சாஸ்திரக் கும்மி, 766.

தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார் அவர்களின் வளர்ப்புத் தந்தையும் ஆன்மீக, ஆவிக்குரிய தகப்பனும் குருவுமாகிய தந்தை கிறிஸ்டியன் ஃபிரெடரிக் சுவார்ட்ஸ் ஐயர் (Rev. Fr. Christian Fredrick Schwartz) அவர்களை, சாஸ்திரியார் தன் வாழ்வில் என்றும் மறவாது அவரது போதனைகளின்படி நடந்து, தனது இலக்கியப் படைப்புகளில் நன்றியோடு நினைவுகொண்டதை பல பாடல்கள், கவிகளில் காணலாம். திருநெல்வேலியில் இருந்து சுவார்ட்ஸ் ஐயரால் தஞ்சாவூருக்கு அழைத்து வரப்பட்ட சிறுவனாகிய வேதநாயகம், தான் படிப்பதற்கு ஒரு புத்தகம் வேண்டும் என்று ஐயரிடம் கேட்டபொழுது, தாவீதின் ஞான சங்கீத புத்தகத்தை வாழ்த்தி கொடுத்ததாக, சாஸ்திரியாரின் வரலாற்றில் அவரது மகன் சங். நோவா ஞானாதிக்கம் சாஸ்திரியார் குறிப்பிடுகிறார்.

மேற்கண்ட கவியானது 'இந்நூற் சொன்னோன் காட்டிய நியாயம்' எனும் தலைப்பின் கீழ் 'சாஸ்திரக் கும்மி' நூலில் பாடப்பட்டுள்ளது. தனக்கு முதன்முதலில் கொடுக்கப்பட்ட நூல் சங்கீத புத்தகம் என்பதையும், அதன் தொடர்ச்சியாய் சாஸ்திரத்தையும் அதாவது முழு வேதாகமத்தையும் கொடுத்தார் என்பதை கூறி, பாடலிலும் இறைக் கருத்திலும் சிறந்து, ஞானம் பெற்றதை நினைத்துப் பராபரனைப் போற்றுகிறார். மேலும் சாஸ்திரியார் தனது இலக்கிய பதிவுகளில் சுவார்ட்ஸ் ஐயரின் பெயரை நாட்டி தம் நன்றியை வெளிப்படுத்தி பராபரனின் திருப்பெயரை போற்றுகிறார்.

'சங்கை போர்ந்து இலங்கு தஞ்சைச்
சுவார்ட்ச் ஐயர் சபைகள் நாங்கள்.'
--- வே. சா., ஜெபமாலை 17 : 10.

சுவார்ட்ஸ் ஐயரின் சபைகள் நாங்கள் என்பதை கூறி ஐயரின் விசுவாசத்தையும் பக்தியையும் எளிமையையும் ஏற்று கிறிஸ்துவின் சாட்சியாக விளங்கினார்.

'வாத்தியார் வேதநாயகன் சோணாட்டின்
வலிய சுவார்ட்ச்சு ஐயருட வளமைச் சீடன்.'
--- வே.சா., பரம நீதிப்புராணம், கவி. 61.

(சோணாடு - சோழ நாடு)

வாத்தியார் (ஆசிரியர்) வேதநாயகன் சோழ நாட்டின் வலிமை மிகுந்த சுவார்ட்ஸ் ஐயரின் வளமை பொருந்திய சீடன் என்று கூறி மகிழ்கிறார். சுவார்ட்ஸ் ஐயரை சோழ நாட்டவராக வெளிப்படுத்துகிறார்.

'சத்திய சுவார்ச் ஐயர் வாழ்கவே பல
உத்தம போதகர் வாழ்கவே.'
---வே.சா., ஞானக் கும்மி, வகுப்பு 3, கடைவாழ்த்து, கவி. 25.

'தஞ்சை சுவார்ச் ஐயர் வாழ்கவே வேத
நாயக சாஸ்திரி வாழ்கவே
விஞ்சைக் குருக்களுஞ் செஞ்சொற் சுவிசேட(ஷ)
வேதச் சபைகளும் வாழ்கவே.'
----வே.சா., ஞானக் கும்மி, வகுப்பு 1, கவி. 70.

சுவார்ட்ஸ் ஐயரை 'தஞ்சை சுவார்ச் ஐயர்' என்று குறிப்பிடும் சாஸ்திரியார் தன்னை 'நெல்லையான்' என்றே குறிப்பிடுவார். தஞ்சைக்கு சுவார்ட்ஸ் ஐயரையும் திருநெல்வேலிக்கு, சாஸ்திரியாராகிய தன்னையும் அடையாளமாக்கி பெருமை கொண்டார். ஆனாலும் தஞ்சைக்கு என்று தனிச்சிறப்பையும் கொடுக்க தவறியவர் அல்லர்.

'தஞ்சைச் சுவார்ச் ஐயர் தன் சீடன்என்று எவர்க்கும்
மிஞ்சக் கதித்தெனக்கு மேன்மை செய்தாய்.'

-- வே.சா., ஞான உலா, நன்றியறிதல், 663 - ஆவது அடி.

தஞ்சை சுவார்ட்ஸ் ஐயரின் சிறந்த சீடன் என உறக்கச் சொல்ல அருள் செய்த பராபரனை போற்றுகிறார்.

'ஓம் பிரணவம் சொன்ன படியாலே
உத்தம சுவார்ச் ஐயருட சீடன்
ஆம்புகழும் திருநெல்லை வேத
நாயக சாஸ்திரி பாடினானே
தாம்பிரவன்னியே காவேரியே
சருவேசுரனைக் கொண்டாடு பாம்பே.'

--- வே சா., ஞானத் தச்ச நாடகம், வகுப்பு 7, வெண்கலச் சற்பம், கவி. 33.

தாம்பிரவன்னி - தாமிரபருணி, தாமிரபரணி.

பொதிகை மலையில் உற்பத்தியாகும் நதி. திருநெல்வேலியில் ஓடும் நதி.

காவேரி - சோழ நாடு - தஞ்சையில் பாயும் நதி.

உத்தம சுவார்ட்ஸின் சீடன் என்று பாடும் நெல்லை சாஸ்திரி, தாமிரபரணி ஓடும் திருநெல்வேலியையும் காவேரி பாயும் தஞ்சையையும் அதில் உள்ள திருச்சபைகளையும் ஒருங்கே அமைந்த, சர்வத்துக்கும் தலைவராகிய பராபரனைப் போற்றி கொண்டாடுங்கள் என்று அழைக்கிறார்.

'மாதவன் சுவார்ச்சு ஐயரும் வாழ்கவே
வானரும் புவியானரும் கவி
வானரும் பல ஞானரும் குரு
மார்களும் துரைமார்களும் பெரி
யோர்களும் தினம் வாழ்கவே
வேதநாயக சாஸ்திரி வாழ்கவே.'

. --- வே.சா., ஞானப் பதக் கீர்த்தனைகள், 395 : 8.

பெரிய தவத்தினை கொண்டு வாழ்ந்த சுவார்ட்ஸ் ஐயரை வாழ்த்துகிறார். அவரோடு உலகின் பல நிலை மனிதரையும் வாழ்த்துகிறார்.

'தஞ்சையினில் பதிவாய் வந்திருந்த போது சத்திய
சுவார்ச்சு ஐயர் தந்த உரையைச் சார்ந்து
நெஞ்சினில் அன்புயர்ந்த யோவான் கோலேப் ஐயர்
நிறைமிகு நற் குருவெனவே நின்ற காலை.'

. --- வே.சா., பெத்லகேம் குறவஞ்சி, பாயிரம், கவி. 7.

'சத்திய சுவார்ச் ஐயர்' உரைத்த மெய் வழிகளை ஏற்று உணர்ந்த சாஸ்திரி, சுவார்ட்ஸ் ஐயரின் காலத்திற்கு பிறகு அன்பில் சிறந்த யோவான் கோலேப் ஐயரை தந்தை சுவார்ட்ஸ் ஐயருடைய இடத்தில் வைத்து 'நிறைமிகு நற்குரு' என ஏற்று மகிழ்ந்ததை வெளிப்படுத்துகிறார்.

சாஸ்திரியார் 'ஆரணாதிந்தம்' என்ற நூலில், வேதநாயகன் விக்கினாபனம் (அறிக்கை) எனும் தலைப்பின் கீழ் அமைந்த பகுதியில், பல கவிகளில் கீழ்வருமாறு பாடுகிறார். (பதிப்பு :வேதபோதகம், வருடம் 1939., பக்கம் 45 , 46.)

'மாதவன் சுவார்ச்சு ஆதிபன் வாயல்
வாணன் யான்.' கவி.4.
(வாயல் - வாசல் வாணன் - வாழ்பவன்)

மகா தவம் பொருந்திய சுவார்ட்ஸ் அதிபனுடைய (அரசன்) வீட்டு வாசலில் வாழ்பவன் நான் என சாஸ்திரியார் தன் பணிவை வெளிப்படுத்துகிறார்.

'திருநெல்வேலி யினிற் பிறந்து மெய்க்கடவுள்
செப்பிய மறையினை உணர்ந்து
குரு சுவார்ச்சு ஐயர் சமுகமே யிலங்கக்
கூடி நற் தஞ்சையில் வளர்ந்து
மருவிய ஞான சாஸ்திரம் அனைத்தும்
வண்ண சாகரம் என அமைத்த
கரு தரும் வேதநாயக ஞானக்
கவிச் சக்கரவர்த்தி என் கதையே.' கவி. 5.

நெல்லையில் பிறந்து மெய் பராபரன் அருளிய திருமறையை கற்றுணர்ந்து குருவாகிய சுவார்ட்ஸ் ஐயரின் அருகில் இருந்து, தஞ்சையில் வளர்ந்து, ஞானம் பொருந்திய திருமறை சாஸ்திரங்கள் அனைத்தும் பல வடிவங்களான இலக்கிய நூல்களாய் செய்து, கிறிஸ்து நெறி கருத்துகளைப் படைத்த வேதநாயகன், 'இவனே ஞானக் கவிச் சக்கரவர்த்தி' இதுவே என் கதை என சாற்றுகிறார். இங்கே தனக்கு தஞ்சாவூர் சபையார் கொடுத்த 'வேத சிரோமணி மகா ஞானக் கவிச் சக்ரவர்த்தியார்' என்ற பட்டத்தை நினைவுகொள்கிறார்.

'நெல்லைமா நகரில் பிறந்து தஞ்சையினின்
நீடிய சுவார்ட்ச்சு மாமுனிவன்
சொல்லை ஆய்ந்து ஏகபரன் திருவேதத்
துறையினுட் புகுந்து எனைப் புரந்தே
எல்லையுங் கடந்திங்கு ஏகமாய் நின்ற
யேசு நாயகனையே பாடும்
முல்லை பெற்றிட மெய்ச்சபையினை யடைந்த
முத்தமிழ் வேதநாயகன் யான்.' கவி. 6.

முதிர்ந்த சுவார்ட்ஸ் ஐயர், பெரும் முனிவராவார். அவரின் சொல்லைக் கேட்டு கீழ்ப்படிந்து ஒரே பராபரனை போற்றிப் புகழ்ந்த, முத்தமிழுக்கும் உரிய வேதநாயகன் நான்.

'மாதவன் சுவார்ச்சு ஆதிபன் வாயிலில் வளரும்
வேதநாயக காவலன் பாடிய விபரம்.' கவி. 11.

பெரும் தவ வலிமை பெற்ற சுவார்ட்ஸ் எஜமானனின் வாசலில் வளரும் அவருடைய காவலன் பாடிய பாடல் இது.

'அருமை நற்சுவார்ச்சு ஐயரின் சமுகம் அமைந்த
திருநெல்லைப்பதி வேத சிரோமணி செழிக்கத் - - - - - - .'
கவி. 13.

நற்பண்பு கொண்ட சுவார்ட்ஸ் ஐயரின் உடனிருந்து வாழ்ந்த திருநெல்வேலி ஊரைச் சேர்ந்த வேதநாயகன் 'வேத சிரோமணி' என சிறப்பிக்கப்பட்டதையும் நினைவு கொள்கிறார்.

சுவார்ட்ஸ் ஐயருக்கு பல பெயர்களை பட்டங்களை சூடி மகிழும் சாஸ்திரியார், தனக்கு கொடுக்கப்பட்ட பட்டங்களையும்

சிறப்புகளையும் நினைந்து சிலாகித்துக் கொள்கிறார்.

'காரண தபோதன இராச ரிஷியாக வளர்
காவலர் சுவார்ச்சு முனிதான்
நேரின் மிகு வேதவுரை நூல் அருளினார் அதனை
நீடுவணமாய் உரை செய்தேன்'.

-- வே.சா., வண்ண சமுத்திரம், பொதுப்பாயிரம், கவி.3.

இராஜ ரிஷி - இராஜ குரு.

அரச தலைமுறைக்கு திருமறை கூறிய காரணத்தால், அரசனை (சரபோஜி II) வளர்த்த காவலரான முனிவர் தான், எனை காவல் புரிந்து பாதுகாத்த சுவார்ட்ஸ் முனிவர் ஆவார். நேர்மை மிக்க திருமறை நூலை கொடுத்தார். அதனை நெடிய, நிறைய பாடல்களாய் வடித்து பாடச் செய்தார் என்று சாஸ்திரியார் கூறுகிறார்.

'மதிஉத்தம முனிவர் சுவார்ச்சு ஐயர் உரைகள்
படியத் தரும் குமரன் என வரும் வேத
நாயகனை ஆள் பரம நாதனே'.

-- வே.சா., வண்ண சமுத்திரம், வேதநாயக சாஸ்திரி பூருவோத்திரம் (வரலாறு)

நல்லறிவு பொருந்திய முனிவர் சுவார்ட்ஸ் ஐயர் போதனைகளை பாட்டாக வடித்து சுவார்ட்ஸின் மகனாக வரும் வேதநாயகனை ஆட்கொண்டருளும் பரம நாதனே என பராபரனை வேண்டி மன்றாடுகிறார்.

தந்தை கிறிஸ்டியன் ஃபிரட்டிரிக் சுவார்ட்ஸ் ஐயர் அவர்களின் 200 - வது இறந்த நாள் நினைவாக, 1998 - ஆம் வருடம் சென்னை குருக்குல் லுத்தரன் இறையியல் கல்லூரி & ஆராய்ச்சி நிறுவனமும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகமும் இணைந்து, தஞ்சையில் நடத்திய கருத்தரங்கில், லுத்தரன் குருக்குல் கல்லூரியின் அந்நாள் இயக்குனர் பேராசிரியர் முனைவர் K. இராஜரத்னம் அவர்கள் வழங்கிய முகப்பு உரையில், சுவார்ட்ஸ் ஐயர் அவர்களை 'இராஜ குரு' என குறிப்பிட்டுள்ளதை கீழ்க்கண்ட உரையின் வழி அறியலாம்.

Rev.Fr. Christian Fredrick Schwartz is known as the "Raja Guru" because he educated his adopted son Serfojee II and saw to that he came to the throne. Regarding this he corresponded with Lord Cornwallis. When he died on February 13, 1798, the whole Tanjore kingdom mourned as if it had lost a ' beloved father '. Even the British East India Company erected him a monument in 1807 at St. Mary's Church in Fort. Chennai. The moving account of his activity. engraved on this marble monument. touches the heart, The whole issue of Schwartz governing Tanjore as the British resident, his care for Serfojee II. and the outcome of Schwartz as missionary, diplomat and "Raja Guru" deserves more attention.

---- Ref. KEY NOTE ADDRESS. NEW POSSIBLITIES IN HISTORICAL RESEARCH. By Prof. Dr. K. Rajaratnam, "Former Director" Gurukul Lutheran Theological College " Research Institute' Chennai..
Christian Fredric Schwartz His Contributions to South India.

இவ்வாறு பெருமைமிகு தந்தை சுவார்ட்ஸ் ஐயரின் நினைவை புகழை தியாகத்தை பல நிலைகளில் பற்பல சூழ்நிலைகளில் தன் பன்நெடும் பாடல்களில் கவிகளில் வடித்து, செய்நன்றி நினைந்து, செயல் ஆக்கம் தூண்டி, பரமன் புகழ் ஓங்க இசையும் ஓசையும் ஒருங்கே தீட்டி அமைத்தார் சாஸ்திரியார். ஒருங்கே தஞ்சையிலும் அதன் சபைகளிலும் பள்ளிக்கூடங்களிலும் மக்களிடமும் முழுமையும் தந்தையின் தியாகம் வேர்ஊன்றி, விருட்சமாகி கனிகள் பல இனிதாய் தந்த செழுமை, தந்தை சுவாட்ஸ் ஐயரின் 'நல்ல போராட்டம்'. தஞ்சையில் அமைதியாய் இளைப்பாறிய தந்தை சுவாட்ஸ் ஐயரே அன்றி வேறில்லை. இது தஞ்சைக்கான பெருமை. தஞ்சை, சுவாட்ஸ் ஐயருக்கான பெருமை என்பதை கீழ் உள்ள கவியில் விளக்குகிறார்.

**தஞ்சை சபையின் வளம்**

'முக்கிய பிரதான குருவும் கோவிலும் சாதி
முறைமையும் சதுர் வளமையும்
மூதறிவுளோர்கள் துரைமார்கள் தேச ஆதிபர்
முதலான பெரியோர்களும்
திக்கெலாம் நிலைகொண்ட கீர்த்தியும் செல்வமும்
திரளான நாட்டையர்மார்
தேர்ந்த உபதேசிமார் கூட்டமும் விற்பனர்
செறிந்த பள்ளிக்கூடமும்
பக்கிஷக் கவிவாணர் அண்ணாவிமார்களும்
பாட்டகர்களின் பெருமையும்
பாரித்த சபையும் சகோதரக் கூட்டமும்
பத்தியும் புத்தியும் உள்ள
சக்கிய சுவிசேஷ சபை தஞ்சை அல்லாதிலைச்
சற்குரு சுவார்ச்சு ஐயரே
தத்துவ ஞானச் சொரூப நித்திய சீவப் பிரபல
சத்திய வேதச் சபைகளே'. -- வே. சா.

**சொற்பொருள் :**

சதுர் - நான்கு திசை, சதுர் பிரசங்கம்
விற்பனர் - கற்றோர், புலவர்
பக்கிஷம் - பட்சம், கோட்பாடு
அண்ணாவி - புலவன், ஆசான்
பாரித்த - வளரும், வளமை
பத்தி - பக்தி
சக்கிய - அன்பு, சிநேகம்
சற்குரு - காரண குரு, நல்ல குரு.

1798 - ஆம் வருடம் பிப்ரவரி மாதம் 13 - ஆம் நாள், இம்மண்ணில் தந்தை சுவார்ட்ஸ் ஐயரின் அருட்பணி சிறந்து நிறைவுற்றது.

இங்ஙனம்,

'உத்தம சுவார்ச்சு ஐயருட சீடன்'
'திருநெல்லை வேதநாயக சாஸ்திரி'

# சமகால சமூக சேவகர் மாரிமுத்து

அருள்திரு முனைவர் ச. இராஜசேகரன்

‘கர்த்தருடைய ஆவியானவர் என்மேலிருக்கிறார்; தரித்திரருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி என்னை அபிஷேகம்பண்ணினார்; இருதயம் நருங்குண்டவர்களைக் குணமாக்கவும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப் பார்வையையும் பிரசித்தப்படுத்தவும், நொறுங்குண்டவர்களை விடுதலையாக்கவும், கர்த்தருடைய அநுக்கிரக வருஷத்தைப் பிரசித்தப்படுத்தவும், என்னை அனுப்பினார்‘ என்ற வாக்கியங்களை ஜெபஆலயத்தில் வாசித்த இயேசு ‘இன்றைய தினம் இது நிறைவேறிற்று‘ என்றார். நற்செய்திப்பணி மற்றும் நற்பணி ஆகியவற்றை இணைத்து அருட்பணி என்று இவ்வாக்கியங்களை ஏசாயா எழுதினான். இன்று நற்செய்திப்பணியையும் நற்பணியையும் இருவேறு கோணத்தில் பார்த்ததால் அருட்பணி அந்தரத்தில் தொங்குகிறது. நற்செய்தி அறிவிப்பவர்கள் பந்தி விசாரிக்கும் மக்கள் சேவையை தகுதியற்ற பணியாக பேதுரு சொன்னதன் (அப்.6:2) விளைவாக சமூகப்பணி இரண்டாம் பணியாகவே முதல் உலகப்போர் வரை கருதப்பட்டது. ஆனால் இந்த சிறியவர்களுக்கு எதை செய்தீர்களோ அதை எனக்கே செய்தீர்கள், உங்களுக்கே நித்திய ஜீவன் என்ற இயேசுவின் போதனைகள், முதல் மற்றும் இரண்டாம் உலகப்போரில் காயப்பட்டவர்கள், உணவு, உடை, உறைவிடம் மற்றும் உடமைகளை இழந்தவர்களுக்கு சேவை செய்ய உந்துதலாக இருந்தது. அதனால் கிறிஸ்தவ அருட்பணி அடுத்த கட்டத்திற்கு எடுத்துச்செல்லப்பட்டதன் விளைவாக நற்செய்திப்பணியும் நற்பணியும் இணைந்த அருட்பணி செழிக்க ஆரம்பித்தது. சமூக சேவை என்பது கடவுளின் மேலும் கடவுள் ஏற்படுத்திய மனித சமூகத்தின் மேலும் கடவுளின் கருணையும் கடமையும் ஒன்று கலந்த பணியாக கிறிஸ்தவ மிஷனெரிகள் செயல்படுத்தினார்கள். அவர்களுடைய சமூகப்பணியால்தான் இன்று இந்தியா கல்வி, மருத்துவம், விஞ்ஞானம், தொழில்நுட்பம், போக்குவரத்து போன்ற வளர்ச்சிகளைக் கண்டிருக்கிறது. இந்தியர்கள் சமூக சேவையில் சளைத்தவர்கள் அல்ல என்பதற்கு பல்வேறு ஆதாரங்கள் உண்டு. இக்காலத்திலேயே இந்தியாவில் சமூகப்பணியாற்றும் சகோதரன் மாரிமுத்து அவர்களைப்பற்றி நான் எழுதுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். தென்காசி அருகில் உள்ள ஒரு கிராமத்தில் ஏழைப் பெற்றோருக்கு பத்தாவது மகனாகப் பிறந்த முத்துவை, வறுமையின் காரணமாக 10ம் வகுப்பு வரைதான் படிக்கவைத்தார்கள். படிக்கும் போதும் படித்த பின்பும் அப்பகுதியில் அதிகமானோர் செய்யும் பீடித்தொழில் மற்றும் சித்தாள் வேலையில் ஈடுபட்டு, துன்மார்க்கமான வாழ்வில் வளர்ந்துகொண்டிருந்தார். குப்பையில் இருப்போரை கோபுரத்தில் ஏற்றும் கடவுளை அப்போது அவர் அறியவில்லை. ஆனால் கோபுரத்தில் இருந்தாலும் குப்பையிலிருப்போரை தேடிவந்த கடவுள் இவரையும் தேடி வந்தார். நண்பர் ஒருவர் மூலமாக கிறிஸ்துவையே அறியாமல் கிறிஸ்தவ வேதாகமக் கல்லூரியில் சேர்க்கப்பட்டார். வேதாகமக் கல்லூரியில் உள்ளவர்களின் கிறிஸ்தவ வாழ்வு இவரை கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளவும், அவருடைய பணிக்காக தன் வாழ்வை அர்ப்பணிக்கவும் பரிசுத்த ஆவியானவர் தூண்டினார். மறுஉத்தரவை விசுவாசம் மற்றும் கீழ்படிதல் மூலம் வெளிப்படுத்தி 24 ஆண்டுகளாக யூத் வித் எ மிஷன் (<:$0) என்னும் உலகளாவிய நிறுவனத்தில் இணைந்து நற்செய்திப்பணியையும் நற்பணியையும் சென்னை, திருச்சி அத்துடன் கடந்த 4 ஆண்டுகளாக மும்பையில் குடும்பமாக ஆற்றிவருகிறார்.

**இறைப்பணியாளர்களுக்கு சமூக சேவை**

என்னை கனம் பண்ணுகிறவனை நான் கனம் பண்ணுவேன் என்ற கடவுளின் வார்த்தைபடி ஏழை ஊழியர்களுக்கு இருசக்கர வாகனங்கள் கொடுப்பதும், ஒவ்வொரு மாதமும் நல்ல அரிசி மற்றும் பணஉதவி செய்வது, திருமணம் நடத்திவைப்பது, பல்வேறு நாடுகளுக்கு அனுப்புவது, ஆன்மீக மற்றும் சமூகப்போதனைகளைக் கொடுப்பதும் இவரது அன்றாட சமூகப்பணியாகும். விவசாயிகளுக்கு சமூக சேவை நாட்டின் முதுகெலும்பாக இருக்கும் விவசாயிகளுக்கென கிறிஸ்துமஸ் காலங்களில் அவர்கள் பணிபுரியும் வயல்வெளிகளுக்கே சென்று நான் எழுதிய வாழ்த்து மடலுடன் பிரியாணி மற்றும் கேக் கொடுத்து அவர்களுக்கு நற்செய்தியை அறிவித்து மகிழ்வித்து மகிழ்ந்தோம்.

**துப்புறவு தொழிலாளர்களுக்கு சமூக சேவை**

வியாதி வரும் முன்பு காத்து, அசுத்தங்களை எல்லாம் சுத்தமாக்கி இறைப்பணியாற்றும் தூய்மைப் பணியாளர்களுக்கு அதிகாலையிலேயே சூடான தேநீர், கேக், அத்துடன் துப்புரவாளர் இயேசுவின் பிறந்தநாள் வாழத்துக்களைக் கொடுத்து கிறிஸ்துவின் பிறப்பை அவர்களுடன் கொண்டாடினோம்.

**காவல்துறையினர்க்கு சமூக சேவை**

காவல்துறையினரை பொதுவாக யாருக்கும் பிடிக்காது, அவர்களை மாமா என்று கேலி செய்வதும், அவர்களைக்கண்டால் விலகிப்போகிற மனிதர்களிடையே அவர்கள் வெயில், மழை, குளிர் என்று எதையும் பாராமல் மக்களைக் காக்க நடுரோட்டிலும் காட்டிலும், திருடர்கள் மற்றும் கொலைக்காரர்கள் பின்னாக ஓடிக்கொண்டிருக்கும் அவர்களுக்கு நம்மாலான உதவி செய்யவேண்டும் என்பது முத்துவின் மனவிருப்பம். கிறிஸ்துமஸ் காலங்களில் அவர்களுக்கு நான் எழுதிய காவலர்களுக்கு காவல் தெய்வம் இயேசுவின் பிறந்தநாள் வாழ்த்துக்கள் என்னும் வாழ்த்து மடலுடன் கேக், சிறு டவல், வசன அட்டை, போன்றவற்றை அவர்கள் இருக்கும் இடத்திற்கு (ரோட்டில் & அலுவலகத்தில்) சென்று வாழ்த்துப்பாடல் பாடி பரிசுகளைக் கொடுப்பது வழக்கம். ஜல்லிக்கட்டு நேரத்தில் திருச்சி ஏசிபி ஐ நேரில் சந்தித்து காவலர்களுக்கு குடிநீர் பாட்டில் மற்றும் ஆரஞ்சு பழம் கொடுத்தது அவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. காவல் நிலையங்களை தூய்மைப்படுத்துவதும், அவர்களுக்கு கொரோனா காலங்களில் சானிடைசர், முகக்கவசம், குடிநீர் வழங்கி மும்பையிலும் இப்பணியைத் தொடர்கிறார். அத்துடன் மழைக் காலங்களில் அவர்களுடன் சேர்ந்து இவருடைய குழுவினர் சாலை சீரமைப்பு, போக்குவரத்தை ஒழுங்கு செய்யும்

பணியிலும் இணைந்து பணியாற்றியதால் மும்பை காவல்துறை இவருக்கு பாராட்டு சான்றிதழ் வழங்கி பெருமைப்படுத்தியது.

ஆபாசவலைதளங்களில் அடிமையாயிருப்போருக்கு சமூக சேவை ஆபாசவலைதளங்களில் அடிமைப்பட்டு தங்கள் நேரம், பணம், மற்றும் மனிதவளத்தை வீணடிப்பதுடன் தன்னையும் மற்றவர்களையும் அத்துடன் ஒட்டுமொத்த நாட்டின் நலனையும் பாதிக்கும் இவர்களுக்காக 'பண்பாளர்களைப் பாழாக்கும் போர்னோகிராபி' என்ற தலைப்பில் நான் எழுதிய சிறிய புத்தகத்தை தமிழிலும் ஆங்கிலத்திலும் 30,000 பிரதி வெளியிட்டு, திருச்சியில் ஒவ்வொரு வீடுகள், தெருக்கள், பேருந்துகளில் என்று அநேக இடங்களில் விநியோகித்தோம்.

**கொரோனா பரவல் மற்றும் வெள்ளப்பெருக்கில் சமூக சேவை**

மும்பையில் கொரோனா கோரதாண்டவம் ஆடிய நேரத்திலும் அதனைத்தொடர்ந்த வெள்ளப்பெருக்கிலும் ஏழை மக்களுக்கும், ஆதிவாசி மக்கள், குடிசைப்பகுதி மக்களுக்கும், புலம் பெயர்ந்தவர்களுக்கும், பிச்சைக்காரர்களுக்கும், குப்பை பொறுக்குகிறவர்களுக்கும், ரிக்ஷா ஓட்டுநர்களுக்கும், விதவைகளுக்கும், உணவு, போர்வை, சோப், பவுடர், குடிநீர், கபசுரநீர், முட்டை, பழம், சானிடைசர், முகக்கவசம், போன்றவை பல்லாயிரம் மக்களுக்கு அனுதினமும் வழங்கினார். பலருக்கு ஆடு, மாடு, பெட்டிக்கடை, பன்றி, தள்ளுவண்டி, பணம் போன்றவைக் கொடுத்து சுயதொழில் தொடங்க உதவுகிறார். புலம்பெயர்ந்த சிலரை சொந்த ஊரில் கொண்டு சென்று விட்டார்கள், 10,000 கி.மீக்கும் மேல் வேன் ஓட்டிச்சென்று ஊழியம் செய்தது மகிழ்ச்சியாக இருந்ததாக முத்துவின் உடன் ஊழியர் ஜோன்ஸ் பெருமைப்படுகிறார். ராஜன் பார்வையற்றோருக்கு ஊழியம் செய்வதுடன் சமையல் செய்வதும், வேன் ஓட்டுவதுமாக சிறப்பான சேவையை முத்துவுடன் சேர்ந்து சலிக்காமல் செய்துகொண்டிருக்கிறார்.

**அரவானிகளுக்கு சமூக சேவை**

மும்பையில் அரவானிகள் அதிகம். அவர்களை பொதுவாக மக்கள் ஏற்பதில்லை . அவர்கள் தவறான பாதைக்கு செல்வதற்கு குடும்பம் மற்றும் சமுதாயம் காரணமாகிறது. அவர்களுடைய வாழ்வாதாரத்திற்காக வேறு வழியில்லாமல் பாலியல் தொழில் செய்கிறார்கள், சிலர் உணர்ந்தும் மீண்டும் பழைய வாழ்வுக்கு போகமுடியாமல் தவிக்கிறார்கள் என்று முத்துவுடன் ஊழியம் செய்யும் சகோ.சிம்பு கூறுகிறார். இயேசுவைப்போல நேசித்து, ஏற்றுக்கொள்வதால் அவர்கள் மனந்திறந்து பேசும் போது அவர்களுடன் இயேசுவின் நம்பிக்கை மற்றும் சமாதான நற்செய்தியை கூறுகிறார்கள். எங்களிடம் நல்ல முறையாக நடந்துகொள்வதுடன், ஜெபித்துக்கொண்டு, ஆலயம் வருவதற்கு ஆவல் காண்பிக்கின்றனர், அத்துடன் பல்வேறு நலதிட்டம் செய்யவும் உதவுகிறார்கள் என்கின்றனர். விபச்சாரப் பெண்களுக்கு சமூக சேவை மும்பையில் சிகப்பு விளக்குப்பகுதிகள் அதிகம். அங்குள்ள பெண்களில் பலர் விபச்சாரத்திற்கு பல்வேறு காரணங்களால் தள்ளப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு மாதந்தோறும் மளிகைப்பொருள் வழங்கி விபச்சாரத்திற்கு முழுக்குப்போட உதவுகிறதுடன், அவர்களை மீட்க மிகவும் துணிச்சலுடன் அவமானத்தைக் கருதாமல், அவர்களிடம் சென்று, பேசி, காவல்துறைக்கு தகவல் கொடுத்து சிலரை மீட்டிருக்கிறார்கள். அவர்களை மீட்பது சமூகத்திற்கு ஆற்றும் பெருஞ்சேவை. ஆம்புலன்ஸ் மற்றும் மருத்துவ சேவை கொரோனா காலத்தில் பாதிக்கப்பட்டவர்களை மருத்துவமனைக்கு கொண்டு செல்ல ஒரு தன்னார்வ நிறுவனம் கொடுத்த 2 ஆம்புலனஸ் மூலமும், பின்பு சொந்தமாக அனைத்து வசதிகளுடன், மரித்தவரின் உடலையும் எடுத்துச்செல்லும் வசதியுடனும் ஒரு புதிய ஆம்புலன்ஸ் வாங்கி அதன் மூலம் ஏறக்குறைய 600 பேர்க்கும் மேலானோரின் உயிரைக் காப்பாற்றியிருக்கிறார்கள் என்று முத்துவுடன் பணிபுரியும் நர்ஸிங் படித்த டேனி சொல்கிறார்.

**தற்கொலை செய்கிறவர்களுக்கு சமூக சேவை**

தற்கொலை செய்துகொள்கிறவர்களுக்கான ஆற்றுப்படுத்தும் சேவையில் அதன் சிறப்பு பயிற்சி பெற்ற நிறுவனத்துடன் சேர்ந்து தற்கொலையை தடுக்கும் பணியிலும் ஈடுபடுகிறார்கள். அலைப்பேசியில் பெரும்பாலானோர் பிரார்த்திக்க கேட்பதாக கூறுகிறார்கள்.

மிகவும் எளிமையும் விசுவாசத்தில் உறுதியும், எந்த உயர்விலும் அடக்கத்தையும் குழுவாக சேர்ந்து பணி செய்வதில் திறம்படைத்தவர் மாரிமுத்து. ஏழைகள், ஊழியர்கள், பல்வேறு சிக்கல்களில் சிக்கித்தவிப்போர்மீது இரக்கம் கொள்பவர், சொல்வதைக்காட்டிலும் செயலில் அதிகம் காட்டவேண்டும் என்பதில் அதிக அக்கறைக்கொண்டவர். இவருடன் இவருடைய மனைவி கவிதா, பிள்ளைகள் பிரின்சி, பிரின்ஸ் மற்றும் பிரசியஸ் ஆகியோரும் உடன் ஊழியர்களும் குழுவாக சேர்ந்து ஜெபித்து, உபவாசித்து, அர்ப்பணிப்போடு செயல்படுகிறார்கள். சமூகப்பொறுப்புடையோரே சமூகசேவையில் ஈடுபடமுடியும் என்ற கூற்றுக்கு ஏற்ப, கடவுளின் கிருபையுடனும் மனிதர்களின் தயவுடனும், விசுவாசப்பாதையில் பயணிக்கிறார்கள். முத்து பெரும்பாலும் பூஜ்ஜியப்பொருளாதாரத்துடன் திட்டமிடுவார், விசுவாசத்துடன் துவங்குவார், அவரைத்தேடி அல்லது அவர் தேடிச்செல்வோர் உதவிகரம் நீட்டுவதில் கடவுளுடைய ஆற்றலை ஒவ்வொரு திட்டப்பணிகளிலும் அன்றாடம் காண்கிறார்.

சமூகப்பணி செய்ய சமூகத்தை அறிந்து, புரிந்துக்கொள்வதுடன் தானும் அனுபவித்தால்தான் அதன் உண்மை நிலையை உணரமுடியும், அதற்கேற்ப தேவைகளை சந்திக்கமுடியும் என்ற முடிவில் ஒரு நாள் முழுவதும் பிச்சைக்காரராக மும்பையில் இருந்து 176 ரூ சம்பாதித்திருக்கிறார். அத்துடன் ஒரு இரவு முழுவதும் ரோட்டில் பிச்சைக்காரர்களுடன் தங்கி இருக்கிறார். காசு இல்லாமல் ஒரு நாள் எங்கேயாவது வேலை செய்து சாப்பிடவேண்டும் என்னும் தீர்மானத்துடன் வேலைத்தேடி அலைந்து, கிடைத்த வேலையில் கிடைத்த பணத்தை வைத்து சாப்பிட்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட கடினமான பயிற்சிகளுக்கு தன்னையும் தன் உடன் ஊழியர்களை ஊக்கப்படுத்தும் பல்வேறு யுக்திகளைக் கையாளுகிறார். கடவுள் இவருக்குத் தேவையான அனைத்து உதவிகள், சரீரசுகம் கொடுத்து, மகிழ்ச்சியுடன் ஈடுபட்டு, துரிதமாக செயல்பட்டு, சமூக சேவைகளிடையே எந்த வேற்றுமையும், ஏற்றத்தாழ்வும் காணாமல் கடவுளுக்கு செய்வதாக மக்களுக்கு செய்கிறார். சென்ரல் மும்பை கிறிஸ்டியன் அசோசியேஷன் மற்றும் பல்வேறு தொண்டு நிறுவனங்கள் சான்றிதழ் வழங்கி இவருடைய சமூக சேவைகளைப் பாராட்டியிருக்கிறார்கள். கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் பத்திரிக்கை சார்பாக நாமும் வாழ்த்துகிறோம், இவர்களின் சமூகசேவை தொடர

# மூன்று கட்டங்களாக தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் நடைபெற்ற தோள் சீலைப் போராட்டம்

J.ஜான் ஞானராஜ் , கல்லிடைகுறிச்சி

கடந்த பதிவின் தொடர்ச்சி...

உயர் வகுப்பினரான மாடம் பிள்ளையிடம் பூதத்தான்குட்டி என்பவரும் அவரது மனைவி இசக்கி என்பவரும் பிற்பட்ட நாடார் சமூகத்தினர் வேலையாட்களாக வேலை செய்து வருகிறார்கள். அக்கால வழக்கப்படி மேலாடை அணியாமல் இடுப்பு முதல் முட்டு வரை ஆடை அணிந்தவர்களாக காலை முதல் மாலை வரை மாடம் பிள்ளை அவர்களுடைய தோட்டத்தில் இவர்கள் பணி செய்கிறார்கள். மயிலாடிக்கு வந்த கிறிஸ்தவ மிஷனரிகள் மூலமாக கிறிஸ்தவத்தை ஏற்று ஆண்டவராகிய இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்கிறார்கள். இயேசுவை ஏற்றுக்கொண்ட இவர்கள் சில நாட்களாக மாடம் பிள்ளை வீட்டிற்கு வேலைக்கு செல்லவில்லை, பூதத்தான்குட்டியும் அவரது மனைவி இசக்கியும் கிறிஸ்தவ மார்க்கத்தில் சேர்ந்துவிட்டார்கள் என்ற செய்தி மாடம் பிள்ளைக்கு வருகிறது. சில வாரங்கள் கடந்து விடுகிறது. பூதத்தான்குட்டி மேல்சட்டை, வேட்டி அணிந்தவராகவும் அவரது மனைவி இசக்கி வழக்கமானபடி உடை அணியாமல் தனது மார்பகத்தை மறைத்து ரவிக்கை அணிந்து ரவிக்கைக்கு மேல் தோள்சீலையும் அணிந்து மாடம்பிள்ளை வீட்டுக்கு வருகிறார்கள். முழுமையாக உடை அணிந்து தனது வீட்டுக்கு வந்த இவர்களை பார்த்தவுடன் மாடம்பிள்ளை அவர்களுக்கு இவர்கள் புதிய ஆட்களாக தெரிந்தார்கள்.

தன்னுடைய வீட்டில் பணி செய்கிறவர்களை போல இவர்கள் அவருக்கு காணப்படவில்லை சிறிது நேரம் கழித்து தான் இவர்கள் தமது வீட்டில் வேலை செய்த வேலையாட்கள் என்பதை மாடம்பிள்ளை புரிந்து கொள்கிறார் இவர்கள் தாங்கள் புதிதாக சேர்ந்துள்ள கிறிஸ்து மார்க்கம் குறித்து அதன் சத்தியங்கள் குறித்தும் தெரிவிக்கிறார்கள். வெகுண்டெழுந்த மாடம் பிள்ளை இருவரையும் அடித்து தனது வீட்டிலிருந்து துரத்தி விடுகிறார். முதல் போராட்ட காலத்தை ஒட்டி நடந்த இந்த சம்பவம் 1878 இல் திரு. P.A. சங்குண்ணி மேனன் எழுதிய ஆரம்ப காலத்திலிருந்து திருவாங்கூர் வரலாறு நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

தோள்சீலை போராட்டத்திற்கான தொடக்க கால சம்பவங்கள் 1812 முதல் தொடங்குகிறது. எல். எம். எஸ் மிஷனரி அருள்திரு வில்லியம் டோபியாஸ் ரிங்கல் தௌபே காலப் பணி அருள்திரு. ரிங்கல் தௌபே அவர்களின் மிஷன் ஊழிய பணி காலத்தில் பெரும் பஞ்சம் ஏற்பட்டது. அந்த பஞ்ச கால சூழ்நிலையில் அருள்திரு .ரிங்கல் தௌபே நாடார்களுக்கு விதிக்கப்பட்டிருந்த தலை வரி என்ற வரிக் கொடுமையிலிருந்து அவர்களுக்கு விலக்கு அளிக்கும் உரிமையை அப்போதைய திருவாங்கூர் சமஸ்தான ஆங்கில பிரதிநிதியான ரெசிடென்ட் மெக்காலே துரை மூலமாக பெற்றுக் கொடுத்தார். முதலில் கிறிஸ்தவ நாடார்களுக்கும் பின்னர் இந்து நாடார்களுக்கும் இந்த சலுகை நீடிக்கப்பட்டது. தென்திருவாங்கூரில் ஒடுக்கப்பட்ட 18 சமூக பெண்கள் மேலாடை அணிய அனுமதி மறுக்கப்பட்டுள்ளது குறித்து திருவாங்கூர் சமஸ்தான ஆங்கிலேய பிரதிநிதியான ரெசிடென்ட் மன்றோ துரை அவர்களின் மேலான கவனத்துக்கு அவர் கொண்டு சென்றதன் மூலமாக 1814 ஆம் ஆண்டு மே மாதம் கிறிஸ்தவத்தை ஏற்ற ஒடுக்கப்பட்ட நாடார் மற்றும் 18 சமூக பெண்கள் மேலாடை அணிந்து கொள்வதற்கான உரிமையை பெற்றார்கள். ஆனாலும் ஒடுக்கப்பட்ட 18 சமூகப் பெண்கள் மேலாடை அணிந்து தெருக்களில் நடந்து செல்வதை உயர் வர்க்கத்தினரால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. இந்த ஆதிக்க மனப்பான்மை தான் முதலாம் தோள்சீலை போராட்டத்திற்கு மூலகாரணமாக அமைந்தது.

**அருள்திரு. மீட் மற்றும் அருள்திரு மால்ட் கால பணிகள்**

முதலாம் மற்றும் இரண்டாம் தோள்சீலை போராட்டத்தை முன்னெடுத்துச் சென்ற எல். எம். எஸ் மிஷனரிகள் அருள்திரு. மீட் மற்றும் அருள்திரு. மால்ட் ஆகியோராவர். ஆதலால் அவர்களிருவர் குறித்து சற்று அறிந்து கொள்வது நல்லது.

1816 ஆம் ஆண்டு ஜனவரி பதினெட்டாம் நாள் அருள்திரு. ரிங்கல் தௌபே தமது மிஷன் பொறுப்பை திரு.மகாராசன் வேதமாணிக்கம் தேசிகர் அவர்களுக்கு வழங்கி பொறுப்புகளை அவரிடம் ஒப்படைத்து விட்டு பிரியாவிடை பெற்றார். மயிலாடியிலிருந்து கொல்லம் துறைமுகத்துக்கு சென்றவர் 05.02.1816 ஆம் நாள் கொல்லத்தில் இருந்து கப்பலேறி மலாக்கா நோக்கி புறப்பட்டுச் சென்றார். 1817 ஆம் ஆண்டு இறுதியில் அருள்திரு. சார்லஸ் மீட் மயிலாடியை தலைமையிடமாகக் கொண்டிருந்த எல். எம். எஸ் பணித்தளத்தின் பொறுப்பு குருவாக, மிஷனரியாக பொறுப்பேற்றுக்கொண்டார். இவர் இங்கிலாந்தில் ஆங்கிலிக்கன் சபை நடத்திய கல்லூரியில் கல்வி பயின்றவர், மெதடிஸ்ட் பிரிவில் இருந்து வந்தவர். இவரது மனைவி செலஸ்டினா மீட் லுத்தரன் மிஷனரி ஒருவரின் மகள் ஆவார்.

அருள்திரு. சார்லஸ் மீட் திறமை மிகுந்தவர், ஊழிய ஆர்வம் மிகுந்தவர், அர்ப்பணிப்பு, மனப்பான்மை கொண்டவர், இப்படி பன்முகத் திறமை கொண்டவராக, சக்தி மிக்கவராகக் காணப்பட்டார். அறியாமை, மூடநம்பிக்கை, வறுமை, ஆகியவற்றிலிருந்து தென் திருவாங்கூர் மக்களை மீட்டெடுக்க வேண்டும் கல்வியை பரப்புவதே அதற்கான ஒரே வழி என உணர்ந்து தென் திருவாங்கூர் மக்களனைவருக்கும் கல்வியை அறிவிப்பதில் அதிக கவனத்தை செலுத்தினார்.

தென் திருவாங்கூர் முழுமைக்கும் மயிலாடி தலைமையிடமாக இருக்க முடியாது என உணர்ந்த அருள்திரு. சார்லஸ் மீட் திருவாங்கூர் சமஸ்தான தலைநகரான திருவனந்தபுரத்துக்கு செல்லும் பாதையில் இருந்த வர்த்தக மையமான கோட்டாரை அடுத்து காணப்பட்ட நாகர்கோவில் என்ற இடத்தை தலைமையிடமாக அவர் தெரிந்துகொண்டார்.

இவர் தலைமையிடமாக நாகர்கோவிலை தெரிந்து

கொண்டது தான் பிற்காலத்தில் நாகர்கோவில் மாவட்டத் தலைநகரமாக மாறுவதற்கு அடித்தளமாக அமைந்தது என்பதில் சந்தேகமில்லை, செல்வாக்கு மிக்கவராக காணப்பட்ட அருள்திரு. மீட் நாகர்கோவில் நீதிமன்றத்தில் நீதிபதியாக நியமிக்கப்பட்டார். ஆனால் லண்டன் மிஷனரி சங்கம் எல். எம். எஸ் மிஷனரியாக பணி செய்யும் ஒருவர் நீதிபதியாக அரசு பணி செய்வதை விரும்பாததால் நீதிபதி பதவியை சில மாதங்களிலேயே ராஜினாமா செய்து விட்டார். அருள்திரு. .சார்லஸ் மீட் அவர்கள் சமுதாய முன்னேற்றத் திட்டங்கள் பொருளாதார முன்னேற்ற திட்டங்களை தென் திருவாங்கூர் மக்கள் மத்தியில் கல்விப் பணிக்கு அடுத்தபடியாக செயல்படுத்தத் தொடங்கினார்.

1819 ஜனவரியில் தஞ்சாவூரில் லுத்தரன் மிஷனரியாக பணி செய்து வந்த அருள்திரு. ஹோரிஸ்ட் அவர்களது மகள் ஜோஹன்னா செலஸ்டினாவை அருள்திரு. மீட் திருமணம் செய்தார். தஞ்சாவூரில் மிஷனரிகள் பள்ளிக்கூடங்கள், விடுதிகள், அனாதை இல்லங்கள் ஆகியவற்றை நடத்தி வந்தார்கள். ஆதலால் இந்த காரியங்களில் செலஸ்டினா மீட் அவர்களுக்கு நல்ல அனுபவம் இருந்தது. அது மீட் ஐயரவர்களுக்கு நாகர்கோவிலில் பயனுள்ளதாக காணப்பட்டது.

தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் அதுவரை பெண் பிள்ளைகள் பள்ளிக்கூடங்களுக்கு செல்லாமல் இருந்தனர். பெண் பிள்ளைகளுக்கான பள்ளிக்கூடங்கள் செலஸ்டினா மீட் அவர்களால் தொடங்கப்பட்டது. இந்நேரம் அருள்திரு. சார்லஸ் மீட் அவர்களுக்கு உதவியாக அருள்திரு.சார்லஸ் மால்ட் - மார்த்தாள் மால்ட் தம்பதியர் எனும் மிஷனரிகள் அனுப்பி வைக்கப்பட்டனர். இவர்கள் மயிலாடியைப் பணி தளமாகக் கொண்டு பணி செய்ய ஆரம்பித்தனர். இந்த சார்லஸ் மால்ட் - மார்த்தாள் மால்ட் தம்பதியரின் மகள் எலைசா மால்ட் அவர்களைத்தான் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் தந்த பன்மொழி பண்டிதர் பேராயர் மகாகனம் கால்டுவெல் அவர்கள் திருமணம் செய்தார்கள்.

**திருமதி.செல்ஸ்டினா மீட்**

திருமதி மார்த்தா மால்ட் ஆகியோர் பெண் குழந்தைகள் மத்தியில் பள்ளிக்கூடங்களை தொடங்குவது என்றும், பெண் குழந்தைகளுக்கு கல்வி புகட்டுவது என அதிக ஆர்வம் காட்டினார்கள். பெண் குழந்தைகளுக்கு இழை பின்னல், ஊசிக்கொண்டு பின்னுதல், நூல் நூற்றல், தையல் தைத்தல் போன்ற காரியங்களை செல்ஸ்டினா மீட், மார்த்தா மால்ட் ஆகியோர் சிறப்பாக கற்றுக் கொடுத்தனர். பெண் பிள்ளைகள் ஜாக்கெட்/ரவிக்கை அணியவும் மேலாடை தோள்சீலை அணியவும் இருவரும் ஊக்கப்படுத்தினர். 1819 இல் ஆற்றூர் புன்னம்விளை தேவாலயம் உயர் வர்க்கத்தினரால் எரிக்கப்பட்டது.

**போராட்டக் களம்**

தென் திருவாங்கூரில் ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தினரில் பெரும்பான்மையாக இருந்த நாடார் (சாணார்) சமூகத்தவரில் 5 ஆயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் எல்.எம்.எஸ் மிஷனரி சங்க மிஷனரிகள் மூலம் கிறிஸ்தவர்களாக மாறி இருந்தனர். அவர்கள் வாழ்ந்த கிராமங்களில் எல்லாம் பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டு இருந்தது, பெண்பிள்ளைகளுக்கு என தனி பள்ளிக்கூடங்களும் அமைக்கப்பட்டிருந்தது. பெண்கள் தங்களது மார்பகத்தை மூடி ஜாக்கெட் ரவிக்கை அணிந்து அதன்மேல் தோள்சீலை எனும் மேலாடை அணியும் படி மிஷனரிகளின் மனைவிமார்கள் கற்றுக் கொடுத்திருந்தனர் அதோடுகூட ஜாக்கெட் தைத்து கொள்வதற்கான தையல் கலையும் கிறிஸ்தவர்களாக மதம் மாறிய பெண்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டு வந்தது. இன்றைய கன்னியாகுமரி மாவட்டத்தின் மேற்குப் பகுதியில் கல்குளம், விளவங்கோடு தாலுகாக்களில் ஒடுக்கப்பட்ட நாடார்களும் உயர் வர்க்க நாயர்களும் அருகருகே வசித்து வந்தனர்.

ஒடுக்கப்பட்ட நாடார் சமூக பெண்கள் திறந்த மார்பகத்தோடு முன்பு சென்றதைப் போல செல்லாமல் ஜாக்கெட் அணிந்து அதன் மேல் தோள்சீலை எனும் மேலாடை அணிந்து பொது இடங்களுக்கு நடந்து செல்வதை, தேவாலயங்களுக்கு நடந்து செல்வதை கண்ட அவர்கள் கலவரத்தை ஆரம்பித்தனர். 1822 ஆம் ஆண்டு மே மாதம் கல்குளம் என்ற பகுதியில் சந்தைக்கு மேலாடை அணிந்து சென்றனர். கிறிஸ்தவர்களாக மதம் மாறிய நாடார் பெண்கள் மீது நாயர் ஆண்கள் தாக்குதலை தொடுத்தனர். ரவிக்கை கிழித்தனர் மேலாடைகளை கிழித்தனர், இவர் அவமானப்படுத்தினார் இந்த தாக்குதல் ஒருமுனை தாக்குதலாக இருக்கவில்லை.

நாடார் பெண்களும் திருப்பித் தாக்கத் தொடங்கினர், இந்த தாக்குதல் நாடார் மற்றும் நாயர் பெண்களுக்கு இடையே பெரும் மோதலை உண்டுபண்ணியது. அக்காலத்தில் நாயர்கள் தென் திருவாங்கூர் காவல்துறையில் மிகுந்து காணப்பட்டதால் நாயர் ஆண்கள் மிஷன் இடங்களை தாக்கினார்கள் மிஷன் பள்ளிக்கூடங்கள் மிஷன் ஆலயங்கள் அடித்து நொறுக்கப்பட்டன. அரசு அதிகாரம் நாயர்களுடன் இருந்தபடியால் நாடார்களின் வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டது. தங்களது பெண்கள் மேலாடை அணிய அனுமதித்த காரணத்திற்காக ஒட்டுமொத்த நாடார்களின் மீது நாயர்களின் கோபம் திரும்பியது நெய்யூர் அருகே கொத்தனாவிளை என்ற கிராமத்தில் கிறிஸ்தவர்களாக மதம் மாறியவர்கள் இந்து திருவிழாவிற்கு நன்கொடை கொடுக்க கட்டாயப்படுத்தப்பட்டனர். அவர்கள் நன்கொடை கொடுக்க மறுத்ததை காரணமாக வைத்து கலவரத்தை தொடங்கினர். தொடர்ந்து நாடார் ஆண்களுக்கு பனை மரங்களுக்கு வரி கட்டவில்லை என்று கூறி நாயர்களால் கலவரம் தொடங்கப்பட்டது. கிறிஸ்தவர்களாக மதம் மாறியவர்கள் தங்களுடைய பனை மரங்களுக்கு வரி கட்டவில்லை எனக்கூறி அவர்களுக்கு அபராதம் விதித்ததொடு, அவர்களது பெண்களை குறிவைத்து அவர்கள் மேலாடை அணிந்து சென்றதை ஒரு குற்றமாக சுட்டிக்காட்டி மேலாடை அணிந்து சென்ற பெண்களையும் சிறையில் அடைத்தனர். எல்.எம்.எஸ் மூத்த போதகர் அருள்திரு. மீட் ஐயரவர்கள் அவர்களனைவரையும் விடுதலை செய்யும்படி பத்மநாபபுரம் நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்தார். அதற்கு எந்த பலனும் கிடைக்கவில்லை. சோர்ந்து போகாத அருள்திரு. . மீட் தென் திருவாங்கூர் சமஸ்தான பிரிட்டிஷ் பிரதிநிதி ரெசிடெண்ட் அவர்களிடம் மனு செய்தார். பிரிட்டிஷ் பிரதிநிதி இதை உடனடியாக விசாரிக்க உத்தரவிட்டார். வரி பாக்கியை சட்டபூர்வமாக பிரிக்க முடியாது என விதி இருந்ததால் அதை ஆண்கள் மீது குற்றமாக கொண்டுவர முடியவில்லை. கிறிஸ்தவ பெண்கள் மேலாடை அணியலாம் என்று 1814 ம் ஆண்டு ரெசிடெண்ட் ஏற்பாட்டில் பிரகடனம் ஏற்கனவே இருந்ததால் பெண்கள் மீதும் குற்றச்சாட்டு நிரூபிக்கப்படவில்லை. ஆண்களும் பெண்களும் எந்தவித அபராதமும் கட்டாமல் விடுதலை செய்யப்பட்டார்கள். இந்த விடுதலைக்கு பின்பு சுமார் 5 ஆண்டுகள் அமைதி நிலவியது. இந்த விடுதலையுடன் முதலாம் தோள்சீலைப்

போராட்டம் நிறைவடைந்தது.

**இரண்டாம் கட்ட தோள்சீலைப் போராட்டம் 1828 - 1829**

இரண்டாம் கட்ட தோள்சீலை போராட்டத்திற்கான தொடக்க சம்பவங்கள் 1827 இல் தொடங்கியது ஆனாலும் வெகுஜனப் போராட்டமாக 1828 இல் தான் உருவெடுத்தது. எல். எம். எஸ் மிஷனின் மேற்கு பிரிவுக்கு பொறுப்பாளராக பொறுப் பேற்ற அருள்திரு. மீட் ஐயரவர்கள் நெய்யூரை தலைமையிடமாக மாற்றினார். நெய்யூர் வட்டாரத்தில் ஏராளமான பாடசாலைகளும் தேவாலயங்களும் அருள்திரு. மீட் ஐயரவர்களால் கட்டப்பட்டன. இரண்டாம் கட்ட தோள்சீலை போராட்டத்திற்கான உடனடி காரணமாக கூறப்படுகிற சம்பவம் என்னவென்றால் கிராமங்களில் வசிக்கும் கிறிஸ்தவர்களிடம் இருந்து வரி வசூலிப்பதற்காக ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு கிறிஸ்தவர் நியமிக்கப்பட வேண்டும் என திருவாங்கூர் சமஸ்தானத்திற்கும், புதியதாக பொறுப்பேற்ற பிரிட்டிஷ் பிரதிநிதி பிரசிடெண்ட் அவர்களுக்கும், 1828 கிறிஸ்தவர்களால் மனு செய்யப்பட்டது. ஏனென்றால் கிறிஸ்தவர்களாக மதம் மாறிய நாடார்கள் வரிகளை கொடுக்காதவர்கள் பொது வேலை செய்ய மறுப்பவர்கள் தீவிரவாதிகள் என்ற தவறான எண்ணத்தை புதிதாக பொறுப்பேற்ற பிரிட்டிஷ் பிரதிநிதியான ரெசிடென்ட் அவர்களிடம் உருவாக்குவதற்கு அக்கால உயர் வர்க்க சமூகத்தினர் முயற்சிகளை மேற்கொண்டனர். அந்த முயற்சிகளை முறியடிப்பதற்காக கிறிஸ்தவ சமயத்தை ஏற்ற நாடார்களும் பிற ஒடுக்கப்பட்ட சமூகத்தினரும் வரி கட்டுவதை தாங்கள் எதிர்க்கவில்லை, தாங்கள் வரி கொடுப்பவர்கள் என்பதை தெளிவு படுத்துவதற்காக இந்த மனுவை சமர்ப்பித்தனர்.

இந்த மனுவை ஏற்றுக் கொண்ட பிரிட்டிஷ் பிரதிநிதி ரெசிடென்ட் அவர்கள் இதுகுறித்து விசாரிக்க ஆணை பிறப்பித்தார்கள். தங்களுடைய எண்ணம் நிறைவேறவில்லை என்பதை அறிந்து கொண்ட உயர் வர்க்கத்தினர் கல்குளம், விளவங்கோடு தாலுகாக்களில் 1828 முதல் கலவரத்தை தொடங்கினர். அக்கால ஆட்சியாளர்களின் காவல்படையில் பெரும்பான்மையாக இருந்த நாயர்கள் இந்த கலவரத்தை முன்னின்று நடத்தினார்கள் இரண்டாம் கட்ட தோள்சீலை போராட்டம் மிகத் தீவிரமானதாக காணப்பட்டது. கல்குளம், விளவங்கோடு தாலுகாவில் பல கிராமங்களை சேர்ந்த தலையாரிகள் கிறிஸ்தவர்கள் தங்களுடைய மதத்தை விட்டு விலக வேண்டும் என ஆலோசனை வழங்கிக் கொண்டிருந்தார்கள் கிறிஸ்தவ மதத்தை விட்டு விலகாவிட்டால் வன்முறைகள் வரும் என மிரட்டல்களையும் அவர்கள் கொடுத்துக் கொண்டிருந்தனர். ஆனாலும் கிறிஸ்தவர்களாக மதம் மாறிய நாடார் உள்ளிட்ட பதினெட்டு சமூகத்தினரும் மிரட்டலுக்கு பயப்படாமல் கிறிஸ்தவ மதத்திலேயே நிலைத்திருந்தனர். இதை கண்ட உயர் வர்க்க நாயர்கள் ஆற்றூர்,அரமனை திற்பரப்பூர் கண்ணனூர், உடையார்விளை, புலிப்பணம், மற்றும் நெய்யூர் ஆகிய கிராமங்களில் வன்முறையை தொடங்கினர். ஆண்களை பிடித்து சிறையில் அடைத்தனர் பிணைக் கைதிகளாக பிடிக்கப்பட்ட ஆண்கள் கயிற்றினால் கட்டப்பட்ட கயிற்றில் ஒரு பகுதி முன்னால் செல்கிற யானையிடமும் பின்பகுதியை பின்னால் செல்கிற யானைகளிடமும் கொடுக்கப்பட்டது. இவ்வாறு சாலைகளில் அழைத்துச் செல்லப்பட்டனர்.

கிறிஸ்தவ பள்ளிக்கூடங்களும் கிறிஸ்தவ தேவாலயங்களும் தீக்கிரையாக்கப்பட்டன. கிறிஸ்தவர்கள் தேவாலயத்திற்கு செல்லக்கூடாது என விரட்டப்பட்டனர். 21.12.1828 ஞாயிற்றுக்கிழமை அன்று கிறிஸ்தவர்களுக்கு ஊழியசேவை விலக்கப்பட்டிருந்தது. ஆனால் ஊழியசேவை செய்யும்படி இந்து நாயர் அதிகாரிகள் கிறிஸ்தவர்களை பிடித்து இழுத்து கட்டாயப்படுத்தி பத்மநாபபுரம் கோட்டையில் உள்ள யானைகளுக்கு தென்னம்பாளை சுமந்து செல்லும் படி செய்தார்கள். ஆனால் சிறிது தூரம் சுமந்து சென்ற ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் உயர் வர்க்க இந்துக்களை திருப்பித் தாக்கத் தொடங்கினர். தங்களை கட்டாயப்படுத்திய அவர்களையே தென்னம்பாளைகளை பத்மநாபபுரம் கோட்டை க்கு சுமந்து செல்லும் படி வைத்தனர். இது உயர் வர்க்கத்தினரால் தாங்க இயலாத செயலாக காணப்பட்டது. ஆற்றூர் என்ற இடத்தில் உயர்வர்க்க இந்து நாயர்கள் அதிக எண்ணிக்கையில் கத்தி, துப்பாக்கி, வாள், தடி, போன்ற ஆயுதங்களுடன் 23 .12 .1828 அன்று கண்ணனூருக்குள் நுழைந்தனர். கிறிஸ்தவ ஆண்களையும் பெண்களையும் குழந்தைகளையும் கடுமையாகத் தாக்கினர் பெண்களை மானபங்கப்படுத்தினார் வட்டாரத்தில் உள்ள கிறிஸ்தவர்களின் வீடுகளும் தேவாலயங்கள் எரிக்கப்பட்டன. மேற்கண்ட கலவரத்தை தூண்டி விட்டவர்கள் உயர் வர்க்க அரசு அதிகாரிகள் என்பது அனைவரும் அறிந்த ஒன்றாக இருந்தது. 28. 12. 1828 அன்று ஆயுதமேந்திய உயர் வர்க்க கூட்டம் நெய்யூருக்கும் அதைச் சுற்றி செயல்பட்டுக் கொண்டிருந்த பாடசாலைகள் கட்டிடங்களுக்கும் கடுமையான சேதத்தை ஏற்படுத்தியது வன்முறையால் பாதிக்கப்பட்ட ஒவ்வொரு பகுதிகளுக்கும் நேரடியாக சென்று துன்புறுத்தப்பட்ட கிறிஸ்தவர்களுக்கு ஆறுதல் கூறியதோடு, அங்குள்ள மக்களிடம் தகவல்களை பெற்று மனுவாக அவற்றை திருவாங்கூர் அரசிற்கும் திருவாங்கூர் அரசின் பிரிட்டிஷ் பிரதிநிதி இரண்டுக்கும் அனுப்பிவைத்தார் இந்த காரியத்தால் மேலும் கோபமடைந்த உயர் வர்க்க சமூகத்தினர் மீட் அவர்களை கொலை செய்யும்படி தீர்மானித்து அதற்கான ரகசிய திட்டங்களுடன் 03.01 1829 அன்று மீட் அவர்கள் வசித்து வந்த மண்டைக்காட்டுக்குள் நுழைந்தனர். ஆயுதமேந்திய முன்னூறு நாயர்களை கொண்ட பெரிய வன்முறை கும்பல் மண்டைக்காட்டுக்குள் புகுந்தது, மண்டைக்காட்டில் மீட் ஐயர் அவர்கள் வசித்த பகுதிக்கு செல்வதற்கு முன்பாக ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தினரையும் தாக்கி அளிப்பதற்காக சிறப்பு பூஜைகளை மண்டைக்காடு பகவதி அம்மன் கோவிலில் அவர்கள் செய்தனர் சிறப்பு பூஜைகள் நடைபெற்று கொண்டிருந்த வேளையில் தகவலறிந்த மீட் அவர்கள் உடனடியாக உதயகிரி கோட்டையில் இருந்த ஆங்கிலேய கேப்டன் சிபால்ட்க்கு அவசர உதவிகோரி வேண்டுகோளை அனுப்பினார்.

ஆங்கிலேயே படை விரைந்து வந்தது பூஜை செய்துகொண்டிருந்த ஆயுதமேந்திய 300 நாயர்களும் அதை அறிந்த உடன் அந்த இடத்தை விட்டு தப்பி ஓடினர். ஆங்கிலேயே அரசு பிரதிநிதி விசாரணை ஒன்றுக்கு ஆணை பிறப்பித்தார். விசாரணை செய்த சமஸ்தான திவான் குற்றம் செய்யாத கிறிஸ்தவர்களை கைது செய்து சிறையில் அடைத்தார். உண்மையான குற்றவாளிகளான உயர் வர்க்க சமூகத்தினரை விட்டுவிட்டார். தாழ்ந்த சாதி பெண்கள் பழங்காலத்து கொள்கைகள், கோட்பாடுகள், பண்பாடுகள், போன்றவற்றை மீறாமல் சமாதானமாய் வாழ வேண்டும் என கோரிக்கை விடுத்தார். இதுகுறித்து தான் ஒரு பொது பிரகடனம் வெளியிடுவதாகவும் அறிவித்தார் அதன்படி 03.02.1829 அன்று

திவான் அவர்களால் பொது பிரகடனம் வெளியிடப்பட்டது. அந்தப் பிரகடனத்தின் மூலம் கிறிஸ்தவர்களுக்கு எந்த நன்மையும் கிடைக்கவில்லை, எந்த நிவாரணத்தையும் அது வழங்கவில்லை. பாரம்பரியத்தை கிறிஸ்தவர்கள் மீறி மேலாடை அணிந்ததே குற்றம் என அந்தப் பிரகடனம் சுட்டிக்காட்டியது . அரசு அனுமதி பெறாமல் கிறிஸ்துவ ஆலயங்கள், பள்ளிகளை கட்டக்கூடாது என திவான் தெரிவித்தார். கிறிஸ்தவர்கள்தங்கள்புகார்களைதிருவாங்கூர்அரசிடம் மட்டுமே கூற வேண்டும் வேறு எவரிடமும், மிஷனரிகளிடமும் கூறக்கூடாது என பிரகடனத்தில் தெரியப்படுத்தினார். கலவரம் சம்பந்தப்பட்ட விசாரணைகளை நடத்துவதற்கு இரு நீதிபதிகள் நியமிக்கப்பட்டனர். 1829 ஆம் ஆண்டு பிப்ரவரி 10ஆம் நாள் விசாரணை தொடங்கப் பட்டது கலவரத்துக்கு காரணமானவர்களாக கருதப்பட்ட கிறிஸ்தவர்கள் கொல்லத்தில் உள்ள சிறைக்கு அனுப்பப் பட்டார்கள். அவர்களது சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டு குடும்பங்கள் துயரத்துக்கு உள்ளாக்கப்பட்டனர். இந்நிலையில் மீட் ஐயர் அவர்கள் இடைவிடாது திருவாங்கூர் சமஸ்தான மகாராஜா அவர்களிடமும் திருவாங்கூர் ஆங்கிலேய பிரதிநிதி ரெசிடென்ட் அவர்களிடமும் திவான் அவர்களிடமும் தொடர்ச்சியாக மனு செய்து நிவாரணங்களை பெற்றுக் கொடுத்தார். தென் திருவாங்கூர் கிறிஸ்தவ சமுதாயம் சில காலம் அமைதியாக காணப்பட்டது. 1829 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட பிரகடனத்தை மீறி ஒடுக்கப்பட்ட 18 சமூக பெண்கள் மேலாடை அணிந்து தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள். ஆண்கள் இலவசமாக ஊழியம் செய்ய ஞாயிற்றுக்கிழமை அன்று மறுத்தார்கள்.

1829 ஆம் ஆண்டு திவான் வெளியிடப்பட்ட பிரகடனம் கிறிஸ்தவ பெண்கள் ரவிக்கை மாத்திரம் அணியலாம் என்றும் மேலாடை அணியக்கூடாது என தடை செய்திருந்தது. ஆனாலும் கிறிஸ்தவர்களாக மதம் மாறிய ஒடுக்கப்பட்ட சமூகப் பெண்கள் ரவிக்கை அணிந்து, அதன் மேல் மேலாடையும் அணிந்து வந்தார்கள் இதனை உயர் வர்க்க சமூகத்தினரால் தாங்கிக் கொள்ள இயலவில்லை .

தொடரும்...

# சத்திய மார்க்கத்தை தழுவினால் தான் பாவமன்னிப்பை பெறமுடியும் என்று நம்பின பொன்னப்பபிள்ளை

1776 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் பிறந்தவர் பொன்னப்பபிள்ளை. நன்கு கல்வி அறிவு பெற்று வேலை தேடிக் கொண்டிருந்தார். எஸ்.பி.சி.கே. சபையின் குருவானவரான ஆபிரகாம் ஐயர் அவர்கள் மூலமாக ஹாப்வ் ஐயரிடம் அனுப்பப்பட்டார். அச்சமயத்தில் ஹாப்வ் ஐயரவர்கள் முருகன் குறிச்சியில் ஒரு பள்ளிக்கூடத்தை துவங்கி இருந்தார். சுமார் 50 மாணவர்கள் இருந்தனர். அங்கு ஒரு உதவியாளர் தேவைப்பட்டார். அந்த வேலை பொன்னப்பபிள்ளைக்கு கொடுக்கப்பட்டது. அப்பள்ளிக்கு மேலாளராக இருந்த ரேனியஸ் ஐயர் மாதம்தோறும் முதல் வாரம் சி.எம்.எஸ். ஆசிரியர்கள் அனைவரையும் பாளையங்கோட்டைக்கு அழைத்து அறிக்கைகளை பெற்றுக் கொள்வார். மேலும் கிறிஸ்தவ போதனைகளையும் செய்யப்பட வேண்டிய காரியங்களையும் குறித்து தேவையான ஆலோசனைகளையும் கொடுத்து வந்தார். அவருடைய போதனைகளை விரும்பி கேட்ட பொன்னப்பபிள்ளை சத்தியத்தின் பாதையில் நடக்க தீர்மானித்தார். தன் வாழ்வில் 50 ஆண்டுகளாக தன்னுடைய பாவங்கள் நீக்கப்பட்டனவா என்பதை அறியாது கலங்கிக் கொண்டிருந்தார். ஆனால் சத்திய மார்க்கத்தை தழுவினால் தான் பாவமன்னிப்பை பெறமுடியும் என்று நம்பினார். இப்படி சிந்தித்து ரேனியஸ் ஐயரிடம் அதைத் தெரிவித்தார். அதைக்கேட்ட ஐயரவர்கள் மகிழ்ந்தார். அதன் பின்னர் ஞாயிற்றுக்கிழமை ஆராதனைகளும் வாரநாட்களில் கொடுக்கும் போதனைகளிலும் பங்கு பெற்றார். முழுவதுமாக சத்தியத்தை சார்ந்து கொண்டார்.

இந்த சமயத்தில் ரேனியஸ் ஐயரின் தோட்டத்தில் வேலை பார்த்துக்கொண்டிருந்த வள்ளியம்மை என்கிற பெண்ணும், அவருடைய இரு பெண்பிள்ளைகளும் ஆண்டவரை ஏற்றுக்கொண்டனர். ரேனியஸ் ஐயர் அது நடத்திவந்த தினசரி காலை மாலை ஆராதனைகளில் வள்ளியம்மை தவறாது கலந்துகொண்டார். அங்கு வள்ளியம்மை தன்னை ஆண்டவருக்கு முழுவதுமாக ஒப்புக்கொடுத்தார். பல காலம் கழித்து அப்பெண் ரேனியஸ் ஐயரிடம், 'ஐயா, கிறிஸ்து நாதர் என்னை ரட்சித்து கொண்டார்; எனக்காக மரித்த அவருக்காக இனி வாழ விரும்புகிறேன். என்னை தங்களுடைய மார்க்கத்தில் சேர்த்துக்கொண்டு ஞானஸ்நானம் கொடுங்கள்.' என்று கூறினாள்.இதைக்கேட்ட ஐயரவர்கள் 'இவள் பாளையங்கோட்டையில் எங்களுடைய முயற்சிகளின் பலனான முதற்கனி' என்று பெரிதும் மகிழ்ந்தார். இவர்களுக்கு 1822 ஆம் ஆண்டு மார்ச் பத்தாம் நாள் மிஷன் வளாகத்தில் இருந்த சிற்றாலயத்தில் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. அதில் பொன்னப்பபிள்ளைக்கு ஞானப்பிரகாசம் என்றும், வள்ளியம்மைக்கு விசுவாசி என்றும், பிச்சம்மாளுக்குக்கு ஆரோக்கியம் என்றும், சப்பாணிக்கு அன்பாயி என்றும் பெயரிடப்பட்டது.

# பெண்கள் சங்கத்தின் வேதாகம பெண்

## திருமதி ஐ . டி . தங்கம் இஸ்ரவேல் அம்மையார் வரலாறு

1910ம் ஆண்டு நாசரேத்தை அடுத்துள்ள வாழையடியில் பிறந்த I.D தங்கம் அமையார் . 1930 ம் ஆண்டு எம். இஸ்ரவேல் தேவதாசன் என்னும் தேவதாசனை மணந்தார்கள். மகாகனம் நீல் அத்தியட்சர் அவர்கள் ஈஸ்டர் ஆராதனை நடத்த பேராலயம் நோக்கி வந்து கொண்டிருக்கும் போது அடைக்கலாபுரத்திலே அக்கினி ரதம் ஒன்று வந்து வட்டமிடுவதைக் கண்டார்கள். இன்று ஒரு பரிசுத்தவானின் மரணம் நிகழ்ந்திருக்கிறது. அடைக்கலாபுரத்திலே அது யார் என்று அறிய அவர் முற்படும் போது அதுதான் பரிசுத்தவான் முத்துசாமி உபதேசியார் என்று அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். மரித்தபின் அக்கினி இரதத்திலே எலியாவைப் போல எடுத்துக் கொள்ளப்பட்ட அன்னாரின் பத்தாவது மகன் தான் இஸ்ரவேல் தேவதாசன் என்பவர் அவரது கரம் பற்றிய மங்கை நல்லாள் அன்புடையராக மனைமாட்சியை மாபெரும் நல்லறமாக நடத்தினார்.

கோதுமை மணியானது நிலத்தில் விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும். "செத்ததே யாகில் மிகுந்த பலனைக் கொடுக்கும்' என்ற வேதவாக்கின்படி மிகுந்த கனிகளைக் கொடுத்த திருமதி. தங்கம் இஸ்ரவேல் அம்மையாரின் வாழ்க்கை சான்று பகர்கிறது. எடுத்த காரியத்தைச் சிறப்பாகச் செய்து முடிப்பதில் பின்வாங்காதவர்கள். ஆகையால் யோனத்தானுடைய முடிவில் பின்வாங்கியதில்லை. சவுலின் பட்டயம் வெறுமையாய்த் திரும்பியதில்லை. என்று அவர்களது கணவரால் புகழப்பட்டார்கள். நீதி 31 : 29" அநேகம் பெண்கள் குணசாலிகளாயிருந்ததுண்டு, நீயோ அவர்கள் எல்லோருக்கும் மேற்பட்டவள் என்று அவளைப் புகழுகிறேன்' என்று புகழும்படியாக தன் கணவனுக்கு எல்லாக் காரியங்களிலும் ஊழியப்பாதையிலே உறுதுணையாக இருந்தார்கள்.

விசுவாசத்தில் அசைக்க முடியாத உறுதி கொண்டவர். யாக்கோபைப் போல போராடிப் பெற்றுக் கொள்வதில் அவருக்கு நிகர் அவரே. மட்டுமல்ல ஆத்தும ஆதாயப் பணியில் தீரர். கனம் ஞானாயுதம் ஐயர் அவர்கள் காலத்தில் வேதாகமப் பெண்ணாக, வேதாகமத்துடன் வீடு வீடாகச் சென்று, வீட்டிலிருக்கும் பிற மதப்பெண்களிடம் சுவிசேஷம் சொல்லி அநேகரை கிறிஸ்துவுக்குள் வழி நடத்தினார்கள். அக்காலத்திலே பெண்கள் அதிகமாக வெளியே வருவது இல்லை. வீட்டிற்குள் சென்று ஆண்களின் அனுமதி இல்லாமல் அவர்களைச் சந்திப்பதும் எளிதான காரியம் அன்று அஞ்சா நெஞ்சமும் அடக்கமுடியா ஆத்தும் தாகமும் கொண்ட அத்தாயார் தகிக்கும் வெயிலிலும் கொட்டும் மழையிலும் கூட தன் ஆத்தும் ஆதாயப் பணியைத் தொடர்ந்து மிகுந்த ஆத்தும பாரத்துடன் செய்து வந்தார்கள்.

கனம் பிரடிரிக் முவல் ஐயா அவர்கள் காலத்தில் பங்களாச்சுரண்டையில் வேதாகமப் பெண்ணாகப் பணிபுரிந்தார்கள். பங்களாச்சுரண்டையைச் சுற்றியுள்ள கிராமங்களுக்குச் சென்று சுவிசேஷம் அறிவிப்பார்கள். அவரது அயராது உழைப்பையும் ஆத்தும் அறுவடையையும் அஞ்சா நெஞ்சத்தோடு அவர் ஆற்றிய பணியையும் குறித்து திருமதி பிரடிரிக் சாமுவேல் அம்மா, திருமதி எமி அழகு சுந்தரம் போன்றோர், மிகவும் பாராட்டி மகிழ்ந்தனர். வி. கே. புரம் ஜமீன்தாரைக் காண்பதற்கு ஒருவருக்கும் அனுமதி இல்லை. ஆனால் இந்த வேதாகமம் பெண்ணோ தன் வேதாகமத்தோடு அவரைக் கண்டு சுவிசேஷம் அறிவித்ததோடு அல்லாமல் அங்கே வீட்டிலுள்ள ஜமீன் குடும்பப் பெண்களுக்கும் சுவிசேஷம் அறிவிக்கும் சிலாக்கியத்தை ஜமீன் அனுமதியோடு பெற்றார்.

இது சுரண்டை சுற்று வட்டாரத்திலேயே பெரும் பரபரப்போடு பேசப்பட்ட செய்தி ஆகும். தன்னுடைய இனிய பாடல்களின் மூலமாக தெருவில் நின்று பாடி, தெருப்பிரசங்கம் செய்வார்கள், கலலும் கனியும் வண்ணம் ஆண்டவரின் அன்பை பஜனைப் பிரசங்கத்தின் மூலம் எடுத்துக் சொல்லும் தாலந்தையும் ஆண்டவர் அவர்களுக்கு அளித்திருந்தார். இசைக்குயிலாக விளங்கிய அவர்கள் இறைவனைப் போற்றிப்பாடத் தொடங்கிவிட்டால் உள்ளம் உருகிக் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தோடும், ஈசாக்கின் திருமணம், கெட்டகுமாரன், நல்ல சமாரியன், மதிகேடனான ஐசுவரியவான் சரிதை போன்ற வேதாகமப் பாகங்களை பஜனைப் பிரசங்கமாக மிக நேர்த்தியாகப் பாடிப் பிரசிங்கிப்பார்கள். இதுவும் சிறந்த ஆத்தும் அறுவடையைத் தந்துள்ளது. இன்று இப்பாடல்களை அவர்கள் சந்ததி இனிமையாகப் பாடி அவர்களது பணியைத் தொடர்ந்து நிறைவேற்றி வருகிறார்கள்.

ஆழ்ந்த இறைப்பற்று உள்ளவர்களான அம்மா அவர்கள் விரும்பிப்பாடிய பல நூற்றுக்கணக்கான பாடல்கள் உண்டு. ஆனால் இறுதி நாட்களிலே அவர்கள் பாடிய பாடல் அவர் வரும் நாளிலே என்னைக் கரம் அசைத்து அன்பாய் தங்கம் என்று கூப்பிட்டுச் சேர்த்துக் கொள்வார் அவர்... சமூகத்தில் அங்கே அவருடனே ஆடிப்பாடியே மகிழ்ந்திடுவேன். என்று வெகு உற்சாகத்துடன் கரம் அசைத்து அழைப்பிற்காகக் காத்திருந்து பாடினார்கள். இவ்வாறாக இரவும் பகலும் ஜெபத்திலும் துதிப்பதிலும் தரித்திருந்த இந்த அன்புத் தாயார் தமது 85 ம் வயதில் 1995ம் ஆண்டு அக்டோபர் 3ம் தேதி அழைப்பைப் பெற்றார்கள். லூக் 16 : 9 "நீங்கள் மாளும் போது உங்களை நித்தியமான வீடுகளிலே ஏற்றுக் கொள்வாருண்டாகும்படி அநீதியான உலகப் பொருளால் உங்களுக்குச் சிநேகிதரைச் சம்பாதியுங்கள். என்ற வேதவாக்கியத்தின் படியே அநேக சிநேகிதர்களை தொற்காளைப் போல் சம்பாதித்தார்கள். மறுமையில் அவர்களை வரவேற்று மகிழ்ந்த எண்ணிறந்த பக்தர்கள் கூட்டத்தில் அவர்களும் ஆண்டவரின் இராஜ்யத்தில் இளைப்பாறிக் கொண்டிருக்கிறார்கள்.

*பெண்கள் ஐக்கிய சங்கம், பங்களாச் சுரண்டை*

# புத்தக அறிமுகம்

மரபும் புதுமையும் சங்கமிக்கும் கவிதைகளின் அணிவகுப்பு கிறித்தியலுக்குக் கட்டியம் கூறும் விந்தைத் தொகுப்பு கவிதை நுட்பங்கள் மணக்கும் கலை நந்தவனம். சொற்கள் தாமாகவே புனைந்து கொண்டு



டாக்டர் மோ.மைக்கேல் பாரடே

கவிதைகளாக நிற்கின்றன. ஏக்கம், கோபம், அழுகை, அன்பு, பக்தி எதுவாயினும் கவிதைகளாகப் பூத்துக் குலுங்குகின்றன. அவையே 'ஏட்டில் வடித்த ஏதேன் எனும் பெயரில், பாட்டில் வடித்த பைந்தமிழ்ப் பனுவலாய்ப் பரிணமித்துள்ளன. கலை மணம் கமழும் காஞ்சியில் பிறந்து, தமிழ் மணம் கமழும், மதுரையில் மணம் கொண்ட இந்நூல் ஆசிரியராகிய "மதுரைக்காஞ்சியார்', கால் நூற்றாண்டுக்கும் மேலாக சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பேராசிரியராகவும், தமிழ்த்துறைத் தலைவராகவும், கலைப்புல முதன்மையர் ஆகவும், பணியாற்றிய சிறப்புக்குரியவர். தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் பேரவை, உலகக் கிறித்தவத் தமிழ்ப் பேரவை, தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம், அறிஞர் பேரவை, கிறித்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்தும் மையம் போன்ற அமைப்புகளில் பொறுப்பு மிக்க பங்களிப்புகளையும், தகைமை சான்ற தலைமைத்துவத்தையும் வழங்கி வருபவர். 'சிலுவை வழி சிந்தனைகள்', 'சிலுவையை குறித்தே' முதலிய அருளுரை தொகுப்புகளையும், 'ஈரக்குழல் பூக்கள்' 'சிலுவையினடியில் சிந்திய மலர்கள்' போன்ற கவிதைத் தொகுப்புகளையும் 'தஞ்சை வேதநாயகர் தமிழ்க்கொடை' 'தமிழ்ச் சித்தர் பாடல்களும் விவிலியமும் (கடவுட் கொள்கைகள்) ஆகிய அரிய ஆய்வு நூல்களையும் வழங்கிய பெருமையோடு ' இரட்சணிய யாத்திரிகம்' (மூன்று தொகுதிகள்), வேதநாயக சாஸ்திரியாரின் 'முத்தமிழ் முத்துகள் மூன்று' முதலிய நூல்களின் பதிப்பாசிரியராகவும், 'ஒளி வழி' , 'புது வாழ்வு' , 'தரு' ( ஆய்விதழ் ) முதலிய இதழ்களின் ஆசிரியராகவும், 'ஞான நொண்டி நாடகம் ' , 'கிறிஸ்து குலக்கும்மி' முதலிய அரிய இலக்கியங்களின் உரையாசிரியராகவும், "The Pentecostal Century, Cool Waters on a Thirsty Land" முதலிய ஆங்கில நூல்களின் மொழி பெயர்ப்பு ஆசிரியராகவும், அமைந்து தாய்த்தமிழுக்குத் தம் பன்முகக் கொடைகளை இன்முகத்தோடு, இடையறாப்பணிகளால் ஈந்து வருபவர். அமெரிக்கா, இங்கிலாந்து, கனடா, பிலிப்பைன்ஸ், சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, தாய்லாந்து என இவரது பயணங்களும் தொடர்கின்றன. இவரது கவிதைப் பயணத்தின் நிகழ்நிலைப் பதிவே இந்த ' ஏட்டில் வடித்த ஏதேன்'.

சுமார் 200 பக்கங்களில் பல்வண்ண அச்சமைப்பில் - கண்ணையும் கருத்தையும் கவரும் படங்களோடு - சிறந்த கட்டமைப்பில் வெளிவந்துள்ள இந்நூல், "ஏட்டில் வடித்த ஏதேன்" என்னும் தலைப்புக்கேற்ப, தெய்விக நந்தவனத்தில் மலர்ந்துள்ள 8 வகை மலர்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இப் பகுப்புகளில், பண்பட்ட இக்கவிஞர், பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு இதழ்களில் எழுதியனவும், பல்வேறு மாநாடுகள், கவியரங்கங்களில் வாசித்தனவுமாகிய கவிதைகளும் பல்வேறு கிறிஸ்தவச் சிறப்பு விழாக்களுக்காக எழுதிய கவிதைகளும் இயேசுவின் ஏழு சிலுவைத் திருமொழிகள் பற்றிய சிந்தனைக் கவிதைகளும் பல்வேறு இசைப் பேழைகளுக்காக இயற்றிய இசைப்பாடல்களும் இடம்பெற்றுள்ளன.




கிறிஸ்து நெறி சார்ந்த பல்வகைப் பொருண்மைகளை, இவ்வளவு இனிய தமிழில் வண்டமிழ்க் கவிதைகளாக வடித்திட இயலுமா எனப் படிப்போர் வியந்து சுவைத்துப் பரவசப்படும் வண்ணம் நூலின் உள்ளடக்கம் உள்ளத்தைக் கவருகிறது. கன்மிகு நூல்களை வடிவமைக்கும் கைத்தடி பதிப்பகத்துப் துணையோடு, கிருபா பதிப்பகம் வெளியிடுள்ள இந்தப் புத்தகம் கிடைக்கும் இடம்

டாக்டர் மோ.மைக்கேல் பாரடே
1, ஐந்தாவது குறுக்கு தெரு,
தனலட்சுமி நகர், சேலையூர்.
சென்னை 600073
Phone : 9003197577

